# ஃபின்லே முன்னேறுகிறது...வண்ண தினுசுகளில்
# 'டெரீன்'/காட்டன் சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்!

நீடித்து உழைக்கும் உறுதி. மடிப்புக் கலையாத பண்பு. நனைத்தால் விரைவாக உலரக் கூடிய வெளிப் பகட்டற்ற உன்னத ஷர்ட்டிங்குகளுடன் இணையும்படி தேர்ந்தெடுக்கப் பற்பல வண்ண தினுசுகள்.

அழகான ஆடைகளுக்கு— ஃபின்லே



**ஃபின்லே**

ASP/JF-117

# வாங்கியதன் தரத்திற்கு எவ்வாறு உறுதிபெறுவீர்கள்?




நிறத்தையும் கோலத்தையும் மட்டும் கொண்டு ஒரு துணியை மதிப்பிட்டுவிட முடியாது. பன்முறையான சலவைகளுக்கு ஈடு கொடுக்குமா? சில மாதங்கள் ஆன பின்பும் புதுமைக்களை மாறாமல் இருக்குமா? இக் கேள்விகளுக் கெல்லாம் 'ஆம்' என்ற விடை உண்டு, துணிகள் மீது லால்பாய் டிரேடுமார்க் இருந்தால். லால்பாய் க்ருப்பிலுள்ள நாங்கள் தரமான துணிகளைப் பல்லாண்டுகளாக உற்பத்தி செய்துவருகிறோம். நவீனமான உத்திகளை அனுபவத்தோடு இணைத்து இயங்கி வரும் எங்கள் ஏழு ஆலைகள், இன்றைய நாகரீகத்தின் எடுத்துக்காட்டான கீர்த்திமிக்க துணிகளை உங்களிடம் கொண்டு வருகின்றன. வாங்கும் பொருளின் தரத்திற்கு உறுதி பெறுங்கள். எப்போது துணி வாங்கினாலும் அதன் மீது லால்பாய் டிரேடுமார்க் இருக்கிறதா பாருங்கள்.

# லால்பாய் க்ருப்

- தி அரவிந்த் மில்ஸ் லிமிடெட்.
- தி ராய்ப்பூர் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
- தி அசோகா மில்ஸ் லிமிடெட்.
- தி ஸர்ஸ்பூர் மில்ஸ் லிமிடெட்.
- தி அருணா மில்ஸ் லிமிடெட்.
- தி அகமதாபாத் நியூ காட்டன் மில்ஸ் கம்பெனி லிமிடெட்.
- தி நூதன் மில்ஸ் லிமிடெட்.


பிரின் ஸ்
பிளேடு
இறகின்
மென்மைபோல்
முகச்சவரம்
செய்யும்
பிளேடு!
THE SYMBOL OF QUALITY
Prince
BLUE RAZOR BLADES
BLUE PRINCE BLADE
MADE IN INDIA

கம்பீரமான
ஆண்மைத்
தோற்றம்!

# இன்டர்நேஷனல்

**லேன்டெக்ஸ்** காலர் கொண்ட

ஷர்ட்டுகளும் புஷ் ஷர்ட்டுகளும்

ஸிந்தெற்றிக் இழைத் துணிகளின் பிரமாதமான தோற்றமும், பருத்தி மற்றும் பருத்திகலந்த துணிகளின் இன்ப உணர்வும் நிறைந்தவை கட்டங்களிலும், வரிகளிலும், ஸாலிடுகளிலும் (ப்ளெயினாகவும்) கிடைக்கின்றன.




இண்டர்நேஷனல்
க்ளாத்திங் இண்டஸ்ட்ரீஸ்
208, அருண் சேம்பர்ஸ்
டார்டியோ மெயின் ரோடு, பம்பாய்-34
போன்: 370201
கேபிள்: 'MULTISHIRT' Bombay



முகத்தின்
முறுவலுக்குத்
தேவை
முழுப் பாதுகாப்பு...

# கிருமிகள் அணுகாதவாறு உங்கள் வாய்க்கு முழுப் பாதுகாப்புத் தருவது ஸிக்னல்

**அதன் செவ் வரிகளிலிருப்பது கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன்**

ஸிக்னல் பற்பசையின் செவ்வரிகளே சொல்லும்: கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் அடங்கியுள்ளதற்கு சாட்சி. முகத்தின் முறுவலை முத்தெனப் போற்றிக் காப்பீர்.... கிருமிகள் அணுகாது வாய் முழுவதையும் காத்துக்கொள்ள ஸிக்னல் உபயோகியுங்கள். புதுமையின்பச் சுவை, மிதமிஞ்சிய நுரை...வாயார உங்கள் பற்கள் வெண்மை யோங்கும்: வாய்நிரம்பும் தூய்மையோடு உங்கள் வாய் மலரும். ஸிக்னல் புன்னகையே ஆரோக்கியப் புன்னகை!







இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SG. 5-140 TM

# கல்கி பொருளடக்கம்

**கீலக புரட்டாசி 27 :: அக்டோபர் 13**



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

"ரெடி... ஸ்டெடி... தொபுகடீர்!... ஃபோட்டோவில் விழுந்தாச்சா?"

பேபி ராஜேஸ்வரி
போட்டோ: "கதிர்"


யார் வெல்லுவார்?
மதுபானம்
அரசாங்க லாட்டரி
கடும் உழைப்பு
சிறுசேமிப்பு



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 11



# திவாலா நிலை நிரூபணமாயிற்று!

கணித விதிகளில் சிலவற்றை நேரடியாக நிரூபித்துக் காட்டுவது கஷ்டம். அச்சமயங்களில் இவ்விதிக்கு மாறாக இருந்தால் என்னவாகும் என்று பார்த்தால், அது அபத்தம் என்று தெளிவாகத் தெரியும். இதிலிருந்து விதிக்கு நிரூபணம் பெறுவார்கள். இவ்வாறு ஒரு விதியை நிரூபிக்கும் முறையை 'அபத்த முடிவு' (Reductio ad Absurdum) என்பார்கள்.

நம் சர்க்காரின் திவாலா நிலையை நேரடியாக ஒப்புக் கொள்ள முடியாதவர்கள், இப்படிப்பட்ட ஓர் அபத்த முடிவின் மூலம் அதை ஒப்புக் கொண்டேயாக வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இந்திய அரசாங்கத்துக்கும், அதன் ஊழியர்களில் பெரும்பாலாருக்கும் இடையே முரண்பாடு ஏற்பட்டிருக்கிறது. ஏறிவரும் விலைவாசிகளைச் சமாளிப்பதற்காக ஊழியர்கள் சம்பளமும் படிகளும் உயர வேண்டும் என்று கேட்கிறார்கள். ஆனால் அரசாங்கமோ, ஊழியர்களின் தேவையை அடிப்படையாகக் கொண்டு ஊதியம் வழங்குவது பற்றிச் சிந்திப்பதற்கில்லை என்கிறது. இருப்பினும், ஊழியர்களின் உழைப்பு மட்டும் வேண்டும் என்கிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ஒழிந்த நேரங்களில் வேறிடங்களில் வேலை பார்த்து உபரி வருமானம்பெற முடியாது. எனவே, அரசாங்க ஊழியருக்கு அவரது தேவையின் அடிப்படையில் சம்பளம் தர வேண்டியது முற்றிலும் அவசியமாகும்.

தத்துவ ரீதியில் சர்க்கார் என்று ஒன்று இருந்தாலும், நடைமுறையில் ரத்தமும் சதையும் கொண்ட சர்க்காராகக் கருதப்படுவது அதன் நிருவாக இயந்திரமே — அதாவது, அதன் சிப்பந்திகளே. சர்க்கார் என்ற தத்துவத்துக்கும், சர்க்கார் என்ற நிருவாக இயந்திரத்துக்கும் இடையே முரண்பாட்டை எதிர்பார்க்க முடியுமா? ஒருகால் சர்க்கார் அமைப்பே மாற வேண்டும் என்று ஒரு தேசிய இயக்கம் தோன்றி, அதன் அங்கமாக, நிருவாக இயந்திரத்தைச் சேர்ந்தோர் ஒத்துழையாமை செய்தால் இப்படி ஒரு நிலையை எண்ணிப் பார்க்கலாம். ஆனால் சம்பளமும், படிகளும் உயர வேண்டும் என்பதற்காக இப்படியொரு முரண்பாடு ஏற்பட்டிருப்பது எண்ணிப் பார்க்க முடியாத ஒன்றாகும். சர்க்கார் தன் நிதிப் பொறுப்புக்களைத் தீர்க்கும் நிலையில் இருந்தால் இப்படி நேராது. எனவே, இப்படி நேர்ந்திருப்பதிலிருந்து — அபத்த முடிவின் மூலம் கணித விதி நிரூபணமாவது போல் — சர்க்காரின் திவாலா நிலை நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் தென் அமெரிக்காவில் ஒன்பது நாடுகளில் சுற்றுப்பயணம் மேற்கொண்டுள்ளார். எதற்காக? உலக சஞ்சாரம் சுவாரஸ்யமானது. சிறிதளவு மதுபானம் செய்தால் களிப்பு உண்டாவது போல், முக்கியமான விருந்தாளியாகி ரத்தின கம்பள உபசாரம் பெறுவதும் ஒரு கிளுகிளுப்பை உண்டாக்கும்; 'நாம் நன்றாக இருக்கிறோம்' என்று எண்ணச் செய்யும். ஆனால் இன்று நம் நிலை என்ன? இந்தியா எதை நோக்கிச் செல்கிறது? தேவையின் அடிப்படையில் சம்பளம் தருவது சாத்தியமில்லை என்று சர்க்கார் சொல்கிற நிலையில் நாடு உள்ளது. அப்படியானால் சர்க்காரின் அலுவல்களை எப்படிச் செய்து முடிப்பது? சர்க்காரில் ஊழியம் பார்ப்பவர்கள், பூரண விசுவாசம் காட்ட வேண்டும் என்று வலுக்கட்டாயமாகக் கோரப்படுகிறது. இது நியாயமே. சர்க்கார் ஊழியர் சம்பள உயர்வு பெறுவதற்காக வேலை நிறுத்தம் செய்வது பற்றியோ, வேலையை மந்தமாகச் செய்வது குறித்தோ, தேச வாழ்வை நாசமாக்கும் யுக்திகளைக் கையாள்வது பற்றியோ நினைக்கவும் கூடாது என்பது உண்மை. ஆயினும், இதற்குப் பிரதியாக, சர்க்காரும் தனது ஊழியர்களின் குறைகளைக் கவனித்து உடனடியாகப் பரிகாரம் தரவேண்டியது அதன் கடமை

யாகும். இவ்விதம் ஊழியருக்குத் தேவைப்படி ஊதியம் தருவதாயின் செலவு உயரும். அதாவது, சர்க்கார் வருமானத்தோடு இந்தப் பிரச்னை தொடர்பு பெறுகிறது. இன்று சர்க்கார் வருமானத்தை அதிகமாக்கிக் கொள்வதற்காக நேரடி வரிகளை உயர்த்தினால் பலன் இராது. அப்படிச் செய்வதால் பொருளாதாரச் சுணக்கம் ஏற்பட்டு, சர்க்காரின் வருமானம் மேலும் குறைகிற நிலையே ஏற்படும். எவ்வளவு பூசி மெழுகி மறைமுக வரியை உயர்த்தினாலும் அதன் சுமை ஏழைகளின் தலையிலேயே விழும். அவர்களது வாழ்க்கைச் செலவு அதிகமாகி, அரசாங்கத்துக்கு எதிராக விரோத உணர்ச்சி பரவும்.

சிப்பந்திகளின் ஊழியம் தேவையில்லை என்று சொல்வது அசாத்தியம்; அதே சமயத்தில் அவர்களுக்குரிய நியாயமான சம்பளங்களைத் தருவதும் அசாத்தியம்; ஏனெனில், நேர்முகமாகவோ மறைமுகமாகவோ வரியை உயர்த்துவது அசாத்தியம் — எனில் இது திவாலா நிலையன்றி வேறென்ன? வரிகள் போட முடியாது எனில் கடனும் கேட்க முடியாது. 'எங்கள் ஊழியர்களுக்குச் சம்பளம் தருவதற்காகக் கடன் தாருங்கள்' என்று அமெரிக்காவையோ, ருஷியாவையோ கேட்க முடியாதே!

பிரத்தியட்ச நிலையைக் காணாமல் சர்க்கார் இனியும் கண்ணை மூடிக் கொண்டிருக்க முடியாது. வெளி நாடுகளுக்குப் போய் விடுமுறை பெறுவதால் மந்திரிகள் கசப்பான உண்மைகளிலிருந்து தப்பிவிட முடியாது.

இன்றைய ஆட்சியாளர்கள் தேச நிலைமையை உணர்ந்து செய்ய வேண்டியது யாதெனில், கட்சிப் பற்றற்ற ஒரு குழுவிடம் நிர்வாகத்தைத் தரவேண்டும். வன்முறையிலோ, அஹிம்சா மார்க்கத்திலோ நாட்டில் கிளர்ச்சி ஏதும் ஏற்படக் காத்திராமல், இன்றைய சர்க்கார் சுயேச்சையாகவே அமைதியான முறையில் மனமொப்பி ஒரு கட்சிப் பற்றற்ற, கொள்கைப் பிடிவாதமற்ற ஆட்சிக் குழுவுக்கு இடம் தர வேண்டும். நாமாக நம் மீது சுமத்திக் கொண்டுள்ள இன்லால்வென்ட் நிலையிலிருந்து தப்ப தீவிரமான மாறுதல்கள் தேவை. இத்தீவிர மாறுதல்கள் ஏற்பட, முதலாவதாக ஆட்சி பீடத்தின் உச்சியில் பெரிய மாறுதல் ஏற்பட்டாக வேண்டும்.

(அடிப்படை: ராஜாஜி 12-10-68 'ஸ்வராஜ்யா'வில் எழுதிய கட்டுரை)

# ஓவியக்கரம் ஓய்ந்தது!

நன்னரோ வியங்கள் தீட்டி
நல்கிய பெருமான் இந்நாள்
பொன்னணி உலகு சென்றான்
—பாரதியார்

**வி**தி விளையாடி விட்டது!

அமரத்துவம் வாய்ந்த ஓவியங்களைத் தீட்டிய மணியம் அற்பாயுளில் கலைவாணியின் அடியினை அடைந்துவிட்டார்!

அஜந்தாவிலும், எல்லோராவிலும், கடல் மல்லையிலும், தஞ்சை புரியிலும், சித்தன்ன வாசலிலும், சிகிரியாவிலும், பாதாமியிலும், பட்டடக்கல்லிலும் உள்ள சிரஞ்சீவிச் சிற்ப, சித்திரங்களைத் தமிழ் வழங்கும் இல்லங்களில் எல்லாம் புத்துயிர் பெறச் செய்த ஓவியர் தமக்கு மட்டும் தீர்க்காயுளை வரமாக வாங்கி வந்திருக்கவில்லை.

இன்னும் எத்தனையோ அரிய ஓவியச் செல்வங்களை அவரிடமிருந்து எதிர்பார்த்திருந்த ரசிகருலகை ஏமாற்றிவிட்டு, நாற்பத்தாறும் வயதிலேயே நம்மைப் பிரிந்து சென்று விட்டார்!

பொம்மைக் கலைஞர் மரபில் பிறந்த மணியத்தின் உதிரத்திலேயே கலை உணர்வு கலந்திருந்தது. கலைக் கல்லூரியில் பயின்று அந்த உணர்வுக்கு உன்னதமான உருவம் தந்து கொண்டார். 1941ல் 'கல்கி'ப் பத்திரிகையில் சேர்ந்து, அதன்பின் பதினேந்தாண்டுகள் கல்கி வாயிலாக உயரிய ஓவியப் பணி செய்து தமிழகமெங்கிலும் தமக்கெனத் தனிப் புகழ் கொண்டார். பேராசிரியர் 'கல்கி' அவர்களின் நிழலில் தங்க நேர்ந்தது மணியத்தின் பெரும் பேறாக அமைந்தது. பாலில் சேர்ந்த குங்குமப்பூப் போலப் பேராசிரியர் அவர்களின் கலை உணர்வில் மணியத்தின் ஓவியத் திறன் பரிமளித்தது. பண்டைய பாரதத்தின் மகத்தான சிற்ப—சித்திரச் செல்வங்களையெல்லாம் மணியம் பெயர்த்தெழுத அவருக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்தார் 'கல்கி'. அதனால் 'மணியம்' பெற்ற பயன் தமிழர் அனைவருக்கும் கிடைத்த பயனாயிற்று.

திரை உலகில் புகுந்து, 'பார்த்திபன் கனவு' திரைப்படத்தில் கலைப் பணி புரிந்து, தமிழரின் பண்டைய நாகரிகச் சிறப்புக்களை வெள்ளித் திரையில் பிரகாசிக்கச் செய்தார்.

தெய்வீகம் என்பதே பாரதக் கலைகளின் ஜீவநாடி. நமது பழங்கலைகளில் மணியம் ஊற ஊற, அவர் சொந்தமாகத் தீட்டும் சித்திரங்களிலும் இந்தத் தெய்வீகம் நன்கு மடலவிழ்ந்து மணக்கலாயிற்று. புனித பாரத கலாசார பரம்பரையின் சிறந்த வாரிசாகும் பாக்கியத்தைப் பெற்றார். கண்ணைக் கவருவதாக மட்டுமின்றி, கலை எழில் மிக்கதாகவும், கௌரவமாகவும் உள்ள ஓவியங்களைத் தீட்டுவதில் தனிப் பெயரெடுத்தார்.

அவர் அயராமல், சலியாமல் திரட்டி வைத்த கலைச் செல்வங்கள் எத்தனை எத்தனையோ! அவை யாவும் அவரது ஓவியங்களுக்கு உயிர் தந்தன. சித்திரம் வரைவதிலும், அதன் பின்னணியைப் புனைவதிலும் அவர் காட்டிய சிரத்தை அதிசயமானது. நமக்கு அவரது ஓவியம் முழுமையாகவே தோன்றும். ஆனால் அந்தக் கலைஞருக்கோ அப்படித் தோன்றாது. ஓர் இண்டு இடுக்கு விடாமல் நுட்பமான, பண்பான கலையம்சங்களை மேன்மேலும் சேர்த்தபடி இருப்பார்.



மிகவும் உடல் நலிவுற்ற போதிலும்கூட அவர் 'ஏனோ தானோ' என்று தம் பணியை ஒப்பேற்ருமல், பிடிவாதமாக பூரணத்துவ மெருகுகளை ஏற்றிக் கொண்டேயிருந்த கடமை உணர்வை இப்போது நினைத்தாலும் நெஞ்சு நெகிழ்கிறது.

ஓவியர் மறைந்துவிட்டார். ஆனல் அவர் வரைந்த ஓவியங்கள் என்றும் நின்று அவரது நினைவை நிலைப்படுத்தும். அவர் தீட்டிய சித்திரங்கள் — தெய்வத் திரு உருவங்களும், சரித்திர நாயக நாயகியரும் — கலை மாணுக்கர்களுக்கு முன்மாதிரியாக விளங்கிவரும்.

தலைசிறந்த ஒரு கலைஞரின் குடும்பம் — அவரது மனையாட்டியும் ஒரே மகனும்—நன்கு வாழச் செய்வது நன்றி மறவா நந்தமிழ் நாட்டினரின் கடமையாகும். 'மணியம் உதவி நிதி' இன்று, 'மணியம் நினைவு நிதி'யாகி விட்டது ! குன்றாத சித்திர நிதி தந்தவரின் நினைவுக்குரிய அஞ்சலியை வாசகர்கள் செலுத்துவரென உறுதியாக நம்புகிறோம்.




நிறைய வேலை வாய்ப்புக்கள் வேண்டும், சம்பளம் அதிகரிக்க வேண்டும் என்று தொழிலாளிகள் விரும்புகின்றனர். தங்களுக்காக மட்டுமின்றி, ஆண்டுதோறும் புதிதாக வேலை தேடி வருகிறவர்களை உத்தேசித்தும் அவர்கள் இவ்வாறு விரும்ப வேண்டியதே. மேலும் மேலும் முதலீடுகள்;' செய்யப்பட்டால்தான் இந்த விருப்பம் நிறைவேறும். முதலீடு செய்பவர்களுக்கு நல்ல உழைப்பாளிகளே தேவை; உழைப்பைத் தவிர்க்க நினைப்பவர்களும், நாச வேலைக்காரர்களால் தவறான வழியில் அழைத்துச் செல்லப்படுவதற்குத் தயாராயிருப்பவர்களும் அல்ல.

நாச வேலையால் உத்தியோக வாய்ப்புப் பெருகாது. அதனால் சம்பளத்தை உயர்த்தவும் முடியாது. இந்த உண்மைகளைத் தொழிலாளர் உணருமாறு செய்ய வேண்டும். இவ்வாறு தொழிலாளர்களுக்கு அறிவு விளக்கம் தருவதை கம்யூனிஸ்ட்கள் (வலது சாரி, இடதுசாரி இருவருமே) விரும்பவில்லை. கம்யூனிஸ்ட்கள் தமது தந்திரத்தை எல்லாரும் வெகு தெளிவாகப் பார்க்குமாறு செய்து விட்டனர். அப்படியிருந்தும் சில அரசியல் கட்சிகள் கம்யூனிஸ்ட்களில் ஏதேனும் ஒரு ரகத்துக்கு ஊக்கம் தருவது விந்தை! தேர்தலில் ஒருசில வாக்குப் பெறுவதற்காக, நாச வேலைக்காரர்களிடம் மிருதுவாக நடந்து கொள்கிறார்கள். இது குறுகிய திருஷ்டி வாய்ந்த கொள்கை. இந்தச் சில வாக்குகளை இழப்பதால் பெரிய வித்தியாசம் ஏற்பட்டு விடாது.' சட்டத்துக்கும், ஒழுங்குக்கும், முன்னேற்றத்துக்கும் பதிலாகக் குழப்பத்தை விரும்புகிறவர்களை, தேசப் பொருளாதாரம் குறித்துக் காலத்துக்கொவ்வாத பழைய வறட்டுக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்களை நம் நாடு ஏற்கவில்லை.

இந்த காந்தி நூற்றாண்டில், இனிப் பூசல்களுக்கு இடமின்றி, ஒத்துழைப்பு மட்டுமே தந்து உற்பத்தியையும், முதலீட்டையும் பெருக்கித் தொழிலபிவிருத்தி காண்பதாகத் தொழிலாளர்களும் முதலாளிகளும் ஒப்பந்தம் செய்து கொண்டால் எவ்வளவு பெருமையாக இருக்கும் !

⁂

லாட்டரிகள் நடத்திப் பணம் திரட்ட ராஜ்ய சர்க்காருக்குச் சட்டப்படி அதிகாரம் இல்லையெனில், சாஸனப்படி ராஜ்ய சர்க்கார்கள் பெறாத அந்த அதிகாரத்தை மத்திய சர்க்காரின் 'அநுமதி'யால் அவை பெற்றுவிட முடியாது. சட்டமன்றம் மூலமாகவே இப்படி உபரி அதிகாரம் வழங்க முடியும். இந்தச் சட்ட சம்பந்தமான அம்சத்துக்கு யாரும் விடை சொல்லாதது ஒரு புறம் இருக்கட்டும். இதில் உள்ள அதார்மிக அம்சத்தையும், கௌரவக் குறைவையும் கவனிக்க வேண்டும். 'லான்ஸெட்' என்ற பிரிட்டிஷ் பத்திரிகை கூறுவது ரசமானது :

பிரிட்டிஷ் பார்லிமென்டில் வைத்தியப் பணிக்காக சர்க்கார் லாட்டரி நடத்துகிற பிரஸ்தாபம் சில மாதங்களுக்குமுன் வந்தது. அப்போது மிஸ் மார்கரெட் ஹெர்பிஸன், 'தொழிற் கட்சியைச் சேர்ந்த ஒரு நிதிமந்திரி தேசிய லாட்டரி பற்றிச் சிந்திப்பது பரிதாபமான காட்சி' என்றார். 'வைத்தியப் பணிக்குப் பணம் வேண்டுமாயின் அதற்குரிய ஒரே வழியான வரிவிதிப்பை மேற்கொள்ளும் தைரியம் நமக்கு வேண்டும்' என்றார். இதன் மீது கட்சிக் கொறடா இல்லாமல் பார்லிமென்டில் வாக்கெடுக்கப்பட்டது. அதன் விளைவாக சர்க்காரின் லாட்டரித் திட்ட உத்தேசம் கைவிடப்பட்டது.

⁂

மாஸ்கோவில் நடத்துவதாக திட்டமிட்டிருந்த அகில உலகக் கம்யூனிஸ்ட் தலைமைக் கூட்டம் காலவரையின்றி தள்ளிப் போடப்பட்டுள்ளது. இவ்வாறு புடாபெஸ்டில் கூடிய கம்யூனிஸ்ட் நாடுகள் முடிவு செய்திருப்பது, செக்கோஸ்லோவேகியாவின் மீது ருஷியா எடுத்த நடவடிக்கையை அவை கண்டிப்பதற்கொப்பேயாகும்.

இப்போது ருஷியா கம்யூனிஸ்ட்களின் தலைமை நாடு என்பதை விட பரதேச்சாதிகார வல்லரசு என்ற முறையிலேயே உருவாகி வருகிறது. தன்னைச் சுற்றி உபக்கிரகம்போல் வாழும் நாடுகளை இரும்புக் கரத்தால் அழுத்தி நெரிக்கிறது.

'நாட்டோ' நாடுகளிடை காணும் ஐக்கிய மின்மையும், அமெரிக்கமக்கள் உலகப் பிரச்னைகளில் தலைகொடுக்காமல் ஒதுங்கி இருக்க விரும்புவதும் ருஷியாவை இப்படி வலுவாக்கி உள்ளன. முன்பு பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் மகத்தான நிலையில் இருந்தது போல் இப்போது ருஷியா உள்ளது.

அமெரிக்கா தனித்திருக்கப் பிரியப்படுவதால், இனி சுதந்திர அபிமானிகள் கம்யூனிஸம் தானாகவே இற்று விழுவதைத்தான் நம்பியிருக்க வேண்டும். நீண்ட கால அடிப்படையில் கம்யூனிஸம் இற்று விழுந்தாக வேண்டும் என்பது வாஸ்தவம். ஏனெனில் அது இயற்கை விதிகளுக்கு முரணானது. ஆயினும் குறைந்த கால நோக்கில் பார்ப்போமாயின் வன்முறைக்கே வெற்றி எனத் தோன்றுகிறது.

⁂

பிரிட்டனுடனும், அமெரிக்காவுடனும் ருஷியாவும் சேர்ந்து போராடியே ஹிட்லரின் ஜெர்மனியை இரண்டாவது உலக மகா யுத்தத்தில் வெற்றி கொள்ள முடிந்தது.

எனவே, ஐ. நா. சாஸனப்படி இன்றைய மேற்கு ஜெர்மனியில் தலையிடத் தனக்கு உரிமை உண்டு என்று ருஷியா கூறுகிறது. இதை அமெரிக்காவும் பிரிட்டனும் அதிகார பூர்வமாக நிராகரித்து விட்டன. இதை உறுதி செய்து மேற்கு ஜெர்மனி சர்க்காருக்கும் அந்நாடுகள் எழுதியுள்ளன. ருஷியா தனக்குச் சாதகமாகக் காட்டும் ஐ. நா. சாஸன ஷரத்து இந்தக் காலத்துக்குப் பொருந்தாது என்கின்றன பிரிட்டனும், அமெரிக்காவும். நேச நாடுகளில் எந்தத் தனியொரு நாடும் மேற்கு ஜெர்மனியில் குறுக்கிட முடியாதென்றும், மூன்றுமாகச் சேர்ந்து போரில் ஈடுபட்டதால், மூன்றுமாகச் சேர்ந்தே பிற்பாடும் செயல்பட வேண்டும் என்றும் இவ்விரு வல்லரசுகள் கூறுகின்றன.

ருஷியா கோரும் உரிமை அபத்தமானது. தனக்குச் சாதகமாக ருஷியா குறிப்பிடும் ஷரத்துக்களை ஐ. நா. ரத்து செய்ய முனைய வேண்டும்.

# சூடாமணி பிரதானம்

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் வால்மீகி ராமாயணத்தின் மூல ஸ்லோகங்களையே இசையில் அமைத்து நாட்டிய நாடகமாகத் தயாரித்தளிக்க வேண்டும் என்று ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஆரம்பித்த பணியில், நான்கு பகுதிகள் இது வரையில் முடிவு பெற்றன. "சூடாமணி பிரதானம்" ஐந்தாவது பகுதி. கிஷ்கிந்தா, சுந்தர காண்டங்கள் இரண்டையும் இந்த நாட்டிய நாடகத்தில் அடக்கியுள்ளார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி.

பத்து முக்கியமான சம்பவங்களை மையமாக வைத்துத் தொடர்ச்சி கெடாது இந்த நாட்டிய நாடகம் தயாரிக்கப்பட்டுள்ளது. இதுவே ஒரு மகத்தான சாதனை. சோகம், ஏக்கம், வீரம், சந்தோஷம், நம்பிக்கை போன்ற பல்வேறு உணர்ச்சி வேகங்கள் கொரந்தையடையும் சம்பவங்கள் நிறைந்த பகுதி. பாத்திரங்களாக வானவர்களும் ராக்ஷதர்களும் மலிந்துள்ளனர். சமுத்திரம், வானம், பம்பா ஸரஸ் போன்ற இயற்கைக் காட்சிகளும் நிரம்பியுள்ளன. இப்படிப்பட்ட பகுதியை நாட்டிய நாடகமாக அமைப்பது எளிதல்ல. ஆனால் இதை மெச்சத்தக்க வெற்றியுடன் கலா ரசிகர்கள் எல்லோரும் பாராட்டக் கூடிய வகையில் அமைத்திருப்பது ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் கலை உணர்ச்சிக்கும், அவருக்கு உதவியாக உள்ள நடிகர்களின் முழுமை எய்திய முதிர்ந்த அநுபவத்திற்கும் சான்றாகும். கேட்டுக் கேட்டுப் பழக்கப்பட்ட சம்பவங்களானாலும், அரங்கத்தில் அவற்றைக் காணும்போது மெய்சிலிர்ப்பு ஏற்படுகிறது.





பரத நாட்டியக் கலையில் எத்தனை நுணுக்கமான புதுப்புது அங்கிக அபிநயங்களை வழங்க வாய்ப்பு உள்ளது என்பதை சூடாமணி பிரதானத்தில் காண முடிகிறது. ஒவ்வோர் உணர்ச்சியையும் எவ்வளவு பரிபூரணமாகக் காட்ட முடியும் என்பதை இந்த நாட்டிய நாடகத்தில் பங்கு கொண்ட பல பாத்திரங்களிடம் காணமுடிந்தது.

பம்பா ஸரஸின் இயற்கை வளப்பைத் திறம்பட அமைத்திருப்பதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். கற்பனைக்கு இடம் இருத்தலே கலை ரசனையின் சூட்சமம்; அதே சமயத்தில் கற்பனையை அதிகமாகவும் சோதிக்காமல் இருக்கவேண்டும். இந்தச் சிறப்பை நாடகத்தில் நன்கு காண முடிந்தது.

சங்கீத கலாநிதி வாசுதேவாச்சாரியாருடைய பேரன் எஸ். ராஜாராம், தமது பாட்டனார் விட்டுச் சென்ற இசைக் குறிப்புக்களை உதவியாகக்கொண்டு "சூடாமணி பிரதானத்"துக்கு இசை அமைத்துள்ளார். இது ஒரு மகத்தான சாதனை. பல அபூர்வ ராகங்களும் அளவுடன் அழகாகப் பாடப்பட்டது பாராட்டுக்குரியது.

கலாக்ஷேத்ர அரங்கில் அடிக்கடி பார்த்து மகிழ்ந்த ஜனார்த்தனன், பாலகோபால், குன்னிராமன் ஆகியோர் இந்த நாட்டிய நாடகத்தில் பளிச்சிட்டு மின்னுகிறார்கள். பெண் பாத்திரங்கள் குறைவாகவே உள்ள இந்தப் பகுதியில் தாரையின் பாகத்தை ஏற்ற விஜயலக்ஷ்மியும், சீதையின் பாகத்தை ஏற்ற கிருஷ்ணவேணி லக்ஷ்மணனும், திரிஜடையாகத் தோன்றிய காயத்ரியும் விசேஷமாக பாராட்டுதலுக்கு உரியவராவார்.

ஸ்ரீ ராஜாராமின் துணைகொண்டு விரைவிலேயே பட்டாபிஷேகத்தை முடித்துவிட வேண்டும் என்பது ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் ஆசை. இது சீக்கிரமே நிறைவு பெற ராமபிரான் அருள்வாராக.

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

சிறியோர், பெரியோர் யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

''உங்கள் தயாரிப்பான போர்ஹான்ஸ் பற்பசையை நான் 18 ஆண்டுகளாக விடாது உபயோகித்து வருகிறேன். முன்பு...என் பற்களும் ஈறுகளும் மிக மோசமான நிலையிலிருந்தன. உதாரணமாக பயோரியாவும் பற்சிதைவும் சேர்ந்து எனக்கு வயிற்று வலியையும் சங்கடத்தையும் ஏற்படுத்தின... என் பற்களும் ஈறுகளும் கடந்த 18 ஆண்டுகளாக உன்னத நிலையில் இருந்து வருகின்றன—முற்றிலும் எல்லாம் போர்ஹான்ஸ் பற்பசையின் செயலே''.

—சங்கர் கே. கும்பார், பம்பாய்.

''கடந்த மூன்று மாதங்களாக எனக்குப் பல் கோவு மற்றும் ஈறு வலியால் அவதி. உங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை நான் உபயோகிக்க ஆரம்பித்த பிறகு, என் பற்கள் அதி வெண்மையாக மின்னுகின்றன. பல்லிலோ, ஈறிலோ வலியே இல்லை''.

—என். சங்கர், ஆரணி.

## போர்ஹான்ஸ்

### பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்— உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! ''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்ற வண்ணப் புத்தகம். தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டெண்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

K 6

பெயர் ____________________

விலாசம் ____________________

____________________

மொழி ____________________

3G F-202 TAM





## மணியான மணிவிழா

திரு டி. வி. ராமாநுஜம் அவர்களின் அறுபத்தோராவது பிறந்த தின வைபவம் பம்பாயில் மிக விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. மகராஷ்டிர முதன் மந்திரி ஸ்ரீ வி. பி. நாயக் அவர்களும் மத்திய மந்திரி ஸ்ரீ சவான் அவர்களும் மற்றும் பல கலை உலகப் பிரமுகர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.



படத்தில் ஸ்ரீ சவான் அவர்கள் வெள்ளியாலான மண்டபத்தை திரு ராமாநுஜத்துக்கு வழங்குகிறார்.





மகாராஷ்டிர முதல் மந்திரி ஸ்ரீ வி. பி. நாயக் பொன்னாடைபோர்த்திக் கௌரவிக்கிறார்.

மணி விழா கண்ட தம்பதியர்.

திரு ராமாநுஜத்தின் உருவப் படத்தைத் திறந்து வைத்து பேசிய பம்பாய் மேயர் ஸ்ரீ குல்கர்னி அவர்களின் பேச்சில் மகிழும் மக்கள் அரங்கம்.

# அவனும் அவளும்

ஆர். சூடாமணி






கிழக்கில் கருந்திரை விலகியது.

விழித்துக் கொண்டான்.

இரவு நெடு நேரம் உறக்கம் வந்திருக்கவில்லை. அதன் பிறகும் விட்டு விட்டுத்தான் தூக்கம். இப்போதுஇமைகள் பிரிய மறுப்பது போல் பாரம் அழுத்தியது. அடுத்த கணமே அதிர்ச்சி. இது என்ன நாள் என்பது சுரீரென்று உறைத்தது. தூக்கக் கலக்கம் பட்டென்று தெளிந்தது.

அவன் படுக்கையிலிருந்து எழுந்தான். சீட்டியடிக்கத் தொடங்கிய போது, தான் உற்சாகமா யிருப்பதாகத் தனக்கே நிரூபித்துக் கொள்ள ஒரு பக்கபலம் தேடிக் கொள்வது போல் தோன்றியது. கிழக்குப்புறமா யிருந்த ஜன்னல் பொன்னூற்றில் நனைந்தது. அவன் வாழ்வுமல்லவோ இன்று பொன்னொளி கொண்டு பொலியப் போகிறது! தனி வாழ்வு இன்றோடு தீர்ந்தது. பத்து மணிக்கு அவன் பதிவுக் காரியாலயம் செல்லும்போது அங்கு தோழமையும் இன்பமும் வாழ்வுப் பங்கீடும் அவள் வடிவில் காத்துக் கொண்டிருக்கும்.

ஜன்னல் வழியாகப் பொன்னொளியோடு புள்ளோசையும் பூமணமும் உள்ளே இழைந்து வந்தன. இரண்டு மாதங்களுக்கு முன் நட்ட ரோஜாப் பதியன்களைக் கம்பிகளின் வழியே எட்டிப் பார்த்தான். பசியஇலைகளிடையே நாணத்தால் சிவந்த ஒரு முகம் போல் சிவப்பு ரோஜா ஒன்று பார்வையைக் கவ்வியது. பிரம்மாண்டமான ஒரு விரலிலிருந்து உருத்த ரத்தச் சொட்டாக ஒரு பெரிய, அலர்ந்த தனி ரோஜா. நேற்று அதன் சாராம்சம் போல் இருந்த முகையிலிருந்து இன்று அந்தப் பூரண மலர்ச்சி முழுக் காவியமாக விரிந்து கிடந்தது.

அதை அவளுடைய குழலில் சூட்டலாம். இதுநாள் வரை அவள் பூச்சூடமாட்டாள். ஆனால் இன்று, அவர்கள் இருவரும் பதிவு ஆபீஸிலிருந்து திரும்பும் போது, அதைச் சூடும் உரிமையை அவளும், சூட்டும் உரிமையை அவனும் அதே ஆபீஸிலிருந்து கொண்டு வந்துவிடுவார்கள்.

அவன் பல் தேய்க்கச் சென்றான்.

முதன் முதலாக அவன் அவளைச் சந்தித்தது தன் தங்கையின் வீட்டில் நடந்த ஒரு விருந்தில் தான். சாதாரணமாக அவன் அது போன்ற விருந்துகளில் கலந்துகொள்வதில்லை. கனவில் ஓர் இசையைக் கேட்டுவிட்டு நனவில் அதை மீண்டும் மீண்டும் ஞாபகப் படுத்திக் கொள்ள முயன்று தோற்று, இழப்புணர்ச்சியில் தவிப்பது போன்ற ஒரு சோகம் அவனைக் கவிந்திருந்த காலம் அது. அவனை உற்சாகப்படுத்தப் பற்பல முயற்சிகள் செய்யும் உறவினர்களின் பொருட்டு உதட்டில் சிரிப்பு என்பதாக ஒரு பிரயாசையைக் காட்டி வலிய வந்த காலம்.

அம்முறை தங்கை எளிதில் விடவில்லை. அவளும் அவள் கணவனும் அவனை மிகவும் வற்புறுத்தி அழைத்ததன் பேரில் அவன் சென்றான்.

சகோதரியின் பிற தோழிகளைப் போலத்தான் அந்த அவளும் அவனுக்கு அறிமுகம் செய்விக்கப்பட்டாள்.

அத்தனை பேருக்கு நடுவில் அவள் புது சிலேட்டில் கிழித்த முதல் கோடு போல் பளிச்சென்று தனியாய்த் தெரிந்தாள். நெற்றி சூனியமா யிருந்தது. ஓர் அலுவலகத்தில் 'டைப்பிஸ்ட்'டாகப் பணியாற்றி வந்தாளாம். இலக்கியமும் தோட்டக் கலையும் அவளது பொழுதுபோக்குகள். பூ வளர்க்கும் விரல்களிலுள்ள நளினமேதான் நூலை ரசிக்கும் உணர்வுகளிலும் இருக்கும்போல் தோன்றியது, அவள் பேச்சின் பண்பைக் கேட்டபோது.

அந்தப் பேச்சின் உயர்வுக்கு அடிமையாகிவிட்டானா? முகத் தெளிவுக்கும் நேரான பார்வைக்கும் ஓர் இயல்பான கம்பீரத்தோடு தன்னை வகித்துக் கொள்ளும் தோரணைக்கும் மனம் பறிகொடுத்து விட்



டாளு? உயிரற்ற அவன் கண்கள் திடீரென்று துளிர்விட்டன. பார்க்கப் போனால் அழகு என்ற சம்பிரதாய லட்சணம் ஏதும் அவளிடம் அமைந்திருக்கவில்லை. ஆயினும் உறுப்புக்களின் சேர்க்கையில் ஒருவித இணக்கம் தெரிந்தது. தராசுத் தட்டுக்களை ஈடாக நிறுவியது போன்றதொரு சமநிலைத் தன்மையின் தளும்பாத அமைதி அவளிடம் காணப்பட்டது.

அன்று பேச்சு ஏதேதோ விஷயங்களைத் தொட்டு வந்து கடையில் 'அழகு' என்ற பொருள் பற்றி விவாதம் எழுந்தது. அப்போது அவள் சொன்னாள்.

''அழகு என்பது வேறெதுவுமல்ல; முரணற்றதே அழகு.''

''ஆம்'' என அவன் தலையசைத்தான்.

அவளுடைய அழகின் விளக்கமும் அது தானே?

அவள் சொல்லிக் கொண்டே போனாள். ''கண்ணுக்கு இதமும் நெஞ்சுக்கு லயமும் தருவது எதுவோ அதுவே அழகு. பார்க்கும்



பொருளில் ஒரு கோணல் இருந்தால் அது பார்வையில் இடறுகிறது. அங்கு அழகு சிதைகிறது.''

அவன் குறுக்கிட்டுச் சொன்னான்: ''ஆனால் விகார உருவத்திலும் நயமான ஒரு தன்மை இருந்தால் அதில் மனம் இதமுறுவதால் அங்கு முரண் மறைந்து அழகு நிலைக்கிறது, இல்லையா ?''

அவள் புன்முறுவலித்தாள்... அப்...பா! பற்கள்தான் எத்தனை வெண்மை! முகத்துக்குப் பவுடர் பூசிக் கொள்ளும் போது பற்களுக்கும் பூசிக் கொள்ளுவாளோ என்று வியக்கச் செய்யும் வெண்மை.

''நீங்கள் சொல்வது ரொம்ப சரி. ஆகவே கண்ணைவிட மனம்தான் அதிக வலிமையுடன்இயங்குகிறது'' என்றான் அவள்.

''அத்தகைய அந்த 'மனம்' என்ற தனியொரு பொருளில் பிறக்கும் அன்பானது உலகம் முழுவதற்குமாய்ப் படர்கிறது. என்ன விந்தை !''

''அது மட்டுமா? அப்படி யாவுக்குமாகப் பெருகும் அன்பு தன்னோடு யாவற்றையும் இரண்டற இணைத்துக் கொண்டு விடும் போது அந்த மகத்தான இணைப்பிலே முரண்களெல்லாம் மறைகின்றன. ஆகவே, அன்பினும் பெரியதோர் அழகு வேறில்லை'' என்று அவள் முடித்தாள்.

அன்பே தலைசிறந்த அழகு! எத்தனை உண்மை! அவள்பால் அவன் அன்பு பூண்டவுடன் அன்பு கொடியேறி விட்டது.

அந்த அன்பு ஒரே நாளில் வந்துவிடவில்லை. அறிமுகத்தைத் தொடர்ந்து நேர்ந்த சந்திப்புக்களில் வளர்ந்த பழக்கத்தில், ஒத்த இரு நெஞ்சங்களின் பரஸ்பர மதிப்பில், நட்புச் சாலையின் ஏதோ ஒரு திருப்பத்திலே அன்பு, எதிரே வரும் ஒரு பயணியாக, எதிர்ப்பட்டு விட்டது. கீழே உதிர்ந்து கிடக்கும் மலர்களை ஒவ்வொன்றாகப் பொறுக்கி எடுத்துக் கொண்டே செல்கையில் திடீரென்று அவை ஒரு மாலை தொடுக்கப் போதுமானவையாயிருப்பதை உணர்ந்தாற் போல், நட்பினூடே ஒவ்வொரு சிறு சந்திப்பையும் போற்றிப் பாதுகாத்து வரும் போது அவை ஓர் ஆழ்ந்த பந்தமாகப் பரிணமித்து நின்றன.

இரண்டு ஆண்டுகளிலே ஒருவரைப் பற்றி ஒருவர் நன்கு அறிந்து கொள்ள வாய்ப்பு இருந்தது. கடைசியில் ஒரு நாள் அவன் மனம் விட்டுக் கேட்டான். அதை அவள் ஒப்புக் கொண்டாள்.

இப்போது இந்தத் தவிப்பு!

காலை உணவு உட்கொண்டபின் குளித்து உடை மாற்றிக்கூட ஆகிவிட்டது. ஜுரம் ஏறுவது போல் நேரம் ஏறிக் கொண்டிருந்தது. சாளரத்தினிடை பொன்னூறு வற்றிப் போய் வெம்மை வண்டலிடத் தொடங்கி விட்டது.

காலண்டரில் காகிதம் கிழிக்கப் போன போது கை நோயுற்றாற் போல் அசைவிழந்து நின்றது. பதினான்காம் தேதி. நேற்றையத் தேதி. அப்படியே காலம் நின்று போய் விட்டால்! வியாழக்கிழமை, பதினான்காம் தேதி. அந்தப் பழைய ஏட்டில் ஒரு பாது காப்பு.

தேதிக்கு மேலே காணப்பட்ட இயற்கைக் காட்சிப் படத்தில் இமய உச்சியும் முன்புறமாகப் பசுமையான பள்ளத்தாக்குகளும் காணப்பட்டன. அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டே முதல் தேதியன்று அவன் அவளிடம், ''இன்னும் இரண்டே வாரம் தான் !'' என்று கிளர்ச்சியுடன் கூறிப் பெருமிதம் கொண்டதும் நினைவுக்கு வந்தது. அவள் சாந்தமாயிருந்தாள். எப்போதும் அப்படி ஒரு தளும்பாத கம்பீரம் அவளிடம். அவள் பேசவில்லை. புன்முறுவல் மட்டும் அந்தப் பற்களுக்குக் கலாய் பூசியது போல் படர்ந்து சென்றது.

இப்போது ஓர் எண்ணம்: அன்று அவள் ஏன் பதில் கூறவில்லை ? அந்தக் கம்பீரத்தின் பின்னே என்னென்ன நினைவுகள் பதுங்கியிருந்தன? அவனுடைய சமீபத்தில் அவள் ஒரு பழகிய பரிச்சயத்தின் தொடர்ச்சியை உணர்கிறாளோ? உள் மண்ணின் சூடுபோல் உயிர்த்துக் கொண்டிருந்த ஒரு முந்தைய இழப்பின் கவட்டில்தான் மூழ்கிப் போயிருந்தாளோ ?

கடந்த பத்து நாட்களாகவே, இந்த நாள் நெருங்க நெருங்க, விலக்கியும் விலகாமல் இப்படி ஒரு சலனம் தன்னை ஆட்டுவிப்பதற்கு அவன் அவமானப்பட்டாலும் அதை உதற முடியாமல் சிக்குண்டு கிடப்பதை எண்ணி இப்போது அவன் துணுக்குற்றான்.

இவ்வாறெல்லாம் அவன் எண்ணுவது முறையா? அவள் கைம் பெண்ணென்று தெரிந்துதானே இந்த முடிவுக்கு வந்தான்? தீர்மான வார்த்தைகளை அவளிடம் பேசியான பிறகு இப்படி சஞ்சலமுறலாமா ?

கடியாரம் ஒன்பது தரம் அடித்தது. சிலிர்த்துக் கொண்ட நெஞ்சில் புகை கவிந்தாற்போன்ற இறுக்கம். ஒலித்து முடிந்த ரீங்காரத்துடன் ஓடிக் கொண்டிருந்த 'பெண்டுல'த்தைப் பிடித்து நிறுத்திவிட வேண்டும் என்ற துடிப்பு விரல்களில் ஒரு வலியாகப் படர்ந்தது.

கட்டிலின் மீது அவன் பார்வை சென்றது. தலையணையில் அவன் தலை பதிந்த கவடு அழுந்தியிருந்தது. இனி இவ்வாறே இன்னொரு தலையணையிலும் ஓர் அடையாளம் பதிந்திருக்கும்.

வேம்பைக் கடித்துவிட்டது போல் நாக்கு நுனியில் கசப்பு பாய்ந்தது. இனம் விளங்காத, ஆனால் மிக ஆழமானதோர் அருவருப்பு நெஞ்சில் குமட்டியது. 'சீச்சீ !'

மீண்டும் நினைத்துப் பார்த்தான்.

மீண்டும் அதே விடை : 'சீச்சீ !'

கதவைத் தாண்டிக் கொண்டு 'பால்கனி'யில் வந்து நின்று கீழே நோக்கினான். வெறும் மணமாக இருந்த தோட்டத்துக்கு உருவமும் ஏற்பட்டு விட்டது. ரோஜா மட்டுமல்ல. சின்னச் சின்னத் தூய்மைகளாக ஒளிரும் மல்லிகை, பொம்மை ஊதுகுழல்கள்போன்ற நில சம்பங்கி, வெறும் அழகுக்காக மட்டும் பயிரிட்ட காஞ வாழை.... இவைகளையெல்லாம் இனி அவள் களிப்புறப் பேணுவாள். அவளுக்குத் தோட்டக் கலை பிடிக்கும்.

மலர்கள் இனிச் செடிகளிலேயே உறங்கி மடியா. அறைகளிலே அலங்காரமாய், பெண் ணின் தலைச் சிறப்பாய், மகிழ்ச்சிக்கும் மங்க லத்துக்கும் ஒரு மணமிக்க அறிகுறியாய், அவை இனி வீடெங்கும் நிறைந்திருக்கும். அவ்வாறு அவை பயன்பட்டு எத்தனை கால மாகி விட்டது! அவள் அப்படி எடுத்துச் சூடினால், அடுக்கி அணி செய்தால், அவற் றின் ஏக்கம் தீர்ந்து விடுமா? அதற்குத்தான் அம்மலர்கள் தவமிருக்கின்றனவா?

வீடெங்கும் பொலியும் மலர்கள் மட்டுமா அவள் இருப்பைக் குறிக்கும்? கொடியில் உலரும் சேலை, வெளியில் அணிந்து செல்ல ஆடையோடு பொருத்தம் பார்த்துப் பொறுக்கி வைக்கப்பட்டு மேசை மேல் காத்திருக்கும் நெக்லேஸ், குளியலறையில் குளித்து முடித்த வெந்நீரின் ஆவியுடன் கலந்து கசிந்திருக்கும் சந்தன மணச்சோப் பின் மெத்தென்ற சுகந்தம், "பால் வழி" யில் கொட்டிக் கிடக்கின்ற நட்சத்திரங்கள் போல், தரை மீதும், மேசை மேலும் கொத்தாகச் சிதறி யிருக்கும் பவுடர் தூவல்கள், நிலைக்கண்ணாடியின் சட்டத்தில் சாந்துக் குச்சியைத் துடைத்த சிவப்பு அடையாளங்கள் — இவை யாவுமே அவள் அங்கு இருக்கிறாள் இருக்கிறாள் என்று பறை சாற்றும். ஒரு பெண்ணின் சுவடு. அதை அவனால் மிகத் தெளிவாக மனத்தில் காண முடிந்தது.

உள்ளே வந்தான். இன்னும் சிறிது நேரத்தில் காரில் ஏறிக் கொண்டு கிளம்ப வேண்டியதுதான்..... நெஞ்சில் சில்லிப்பு உறைந்தது.

மணி ஒன்பதே முக்கால். அவன் நாற்காலி யில் சரிந்தான். உடலெல்லாம் வேர்த்தது.

இது என்ன செய்து விட்டான் அவன்? உண்மையில் இப்படி ஒரு நிலைமையா? அவ விடம் தன்னை மணந்து கொள்ளுமாறு அவன் உண்மையாகத்தான் கேட்டானா? அப்போது மனத்தைச் சிறுமைகளினின்று உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தாற் போலிருந்த ஒரு பெருந்தன்மையுணர்வு இப்போது கயிறறுந்த படம் ஆணியிலிருந்து கழன்று விழுவது போல், விழுந்து நொறுங்கி விட்டிருந்தது.

அவள் முகம் உள்ளத்தில் பூத்துச் சிரித்தது. லயத்தின் இதமே எழில் என்ற விளக்கத்துக்குப் பிரத்தியட்ச எடுத்துக்காட் டான முகம். மரநிழல் படிய அமைதியான சலசலப்போடு ஓடும் ஆறு போன்ற அந்தச் சாந்த முகத்தில் நெற்றி மட்டும் வெறிச் சென்று இருந்தது. வடிவு பெற்ற சிலை கடைசியாகச் சிற்பி அதன் கண்களைத் திறந்து முழுமை பெற வைப்பதற்காகக் காத் திருப்பது போல் அந்த வெறிய நெற்றி அவன் கைக் குங்குமம் பெற்று உயிர்பெறக் காத்துக் கொண்டிருந்தது.

'சீச்சீ!' மறுபடியும் அந்த வெறுப் புணர்ச்சி.

குங்குமமா? அவன் தருவதற்காகவா? ஏற்கனவே ஒரு தரம் திலகம் பெற்றுத் திகழ்ந்த நுதல்தானே அது? இனி எந்தப் புதுமையைப் பெற்றுவிடப் போகிறது?

எல்லாமே அப்படித்தான்.

ஒரு முறை அவன், "இன்று நீ எத்தனை அழகாயிருக்கிறாய்!" என்ற போது அவள் பதிலளிக்காமல் புன்னகைத்தாளே, அந்தப் பவுடர் பூசியது போன்ற பற்களைக் காட்டி. அந்த மௌனம் அப்போது கவிதை ஆழம் போல் சொல்லைக் கடந்த இனிமையாகத் தோன்றியிருந்தது. இன்று அந்த மௌனத் துக்கு வேறொரு காரணம் தோன்றியது: அவளுக்கு அந்தப் பாராட்டில் புதுமை ஏதும் இல்லை. முன்பும் அவள் வாழ்வில் அதே மாதிரியான சொற்கள் ஒலித்திருந்த நினைவில் அவள் அதைச் சகஜமாய் ஏற்று மௌனம் சாதித்து விட்டாள். அதுதானே உண்மை?

அவளிடம் தான் முன்பொரு முறை அறிந்தி ருந்த ஒரு துணையின் நிழலை, ஓர் இனிமை யின் தொடர்ச்சியை, அல்லாமல் அவள் வேறென்ன காண முடியும்? 'இந்தப் பேச்சு எனக்குப் புதிதல்ல' 'இந்தத் தொனி எனக்குப் பழக்கம்தான்', 'இந்த அன்பின் முக ஜாடையை நான் அறிவேன்' என்பது போன்ற எண்ணங்கள்தானே அவளிடம் நிறைந்திருக்கும்?



## மகாத்மா மணிமொழி

குழந்தைப் பருவத்திலிருந்து சத்தியத்தை வழிபடுகிறவன் என்ற உரிமை எனக்குண்டு. சத்தி யத்தை வழிபடுவதே எனக்கு மிகமிக இயற்கையாக இருந்தது. பிரார்த்தனை மயமாக நான் செய்த ஆராய்ச்சியிலிருந்து 'சத்தியமே கடவுள்' என்ற தத்துவம் எனக்குப் பிரகாசமாக வெளிப்பட்டது. 'கடவுளே சத்தியம்' என்று சொல்வது வழக்கம். நான் அதற்குப் பதில் 'சத்தியமே கடவுள்' எனக் கண்டேன். இந்த மந்திரம் கடவுளை நான் முகமுக மாகப் பார்க்குமாறு உதவுகிறது. இதனால் என் ஜீவனின் ஒவ்வோர் இழையிலும் அவன் வியாபித் திருப்பதை உணருகிறேன்.

எல்லாமே அவனுக்கு அப்படித்தான் : படித்த கதையாக, தெரிந்த கலையாக.

நாற்காலியிலிருந்து எழுந்தான். என்ன துரோகமான சிந்தனைகள் இவை ? இது தவறு. இந்தத் திருமணம் அவனுக்கு மகிழ்ச்சியளிப்பதுதான். அதிலென்ன சந்தேகம்....? மணி பத்தை எப்போதோ கடந்துவிட்டது. அவள் காத்திருப்பாள்..... அவன் காரில் ஏறிக் கொண்டு செலுத்தலானான்.

மனக் கண்ணில் ஏதேதோ காட்சிகள். அவன் அவளை அன்புடன் நோக்குகிறான். கரம் நீண்டுகிறான். நேசம் பேசுகிறான். ஆனால் அவளிடம் ஏற்கனவே வேறொருவன் காட்டியிருந்த தன்மை அது. வேறொருவனுடன் அவள் பகிர்ந்திருந்த தரிசனம். அவன் கைப்பிடியுள் புதைந்துள்ளது வேறொரு ஸ்பரிசத்தை அறிந்த கை.

இரண்டாந்தரச் சரக்கு.

அந்த அழகும் அந்த அன்பும் முழுமையாய்த் தனக்கு உரிமையல்ல. கிரகணம் பிடித்த சந்திரனைப் போல், அவற்றில் தன் ஆர்வத்தைப் பரிகசிக்கும் ஒரு குறை. உணர்வில் இடறும் ஒரு மூளித்தன்மை. ஏற்கனவே வாழ்வை அறிந்தவள் அவள். மீண்டும் அருவருப்பு எழுந்தது. ஓரங்களில் எலி கடித்துப் பொத்தலாக்கிவிட்ட கந்தல் போன்றதுதான் தன் உரிமை. இந்த எண்ணம் வந்ததும் தன்னிரக்க உணர்ச்சியும் தலை தூக்கியது. எத்தகைய அறிவிலி அவன் ! ஏதோ வேகத்தில் 'பின்ன மிட்டாயே போதும்' என்று தலையசைத்து விட்டுப் பின்னால் தான் ஏமாந்ததை எண்ணி அசடு வழிய வேதனையுறும் சிறுவனைப் போல் அவன் ஒரு மூட்டமான ஏமாற்ற உணர்வில் விரலைக் கடித்துக் கொண்டான். அந்த மனநிலையில் ஒரு கணம் அவள் மீது கூட ஆத்திரம் வந்தது. அவன்தான் அறியாமையில் கேட்டான் என்றால் அவள் ஏன் இசைந்தாள்? பண்பற்றவள்.

தெருவில் நெருக்கிய கும்பலெல்லாம் அவனை, 'இதோ பார், ஒரு பைத்தியக்காரன்' என்று என்னுவது போல் இருந்தது. போக்குவரத்துச் சிவப்பு விளக்கு 'இன்னும் நேரமிருக்கிறது, தப்பி ஓடு' என்பது போல் சிறிது நேரம் நிறுத்தி வைத்தது.

திரும்பிவிடலாமா ?

வண்டியின் நிறுத்தத்தில் எஞ்சின் துடிப்பு அவனது ரத்த நாளங்களினுள் எதிர்ப்பின் நாடியாகத் துடித்தது. ஏதோ விபத்துத் தளத்தை நோக்கிப் போகிறவன் மாதிரி இருந்தானே தவிர, தன் திருமணத்துக்காகப் போய்க் கொண்டிருக்கும் மணமகன் போலவே இல்லையே! குழப்பத்துடன் சிரித்துக் கொண்டே, காபர்டீன் உடைகளைக் கையால் ஒருமுறை தடவிச் சரி செய்து கொண்டான்.

அவனுக்குத் திருமணம். அங்கு அவள் இருப்பாள். சாட்சிக் கையெழுத்துப் போட ஒரு நண்பர். பதிவு ஆபீசரே இன்னொரு சாட்சியாகக் கையொப்பமிடுவார். இரண்டு மலர் மாலைகள். பந்தகமாக ஒரு வாழ்வு ஒப்பந்தம். பிறகு அவள் அவனுடையவள்.

அவனுடையவள் மட்டும்தானா ? அதற்கு முன்....? சீச்சீ !

பச்சை சிக்னல்.

மோட்டார் புறப்பட்டது. திரும்பிவிடலாமா? மர வேரின் மீது இறங்கும் கோடாலி வீச்சாக, மீண்டும் மீண்டும் இதயத்தில் அதே எண்ணம்: திரும்பி விடலாமா ? ஆனால் வண்டி தன் முதல் பாதையில்தான் சென்று கொண்டிருந்தது. வருவதாய்ச் சொல்லிவிட்டோம் என்ற எண்ணத்தினால் யோசனைகளின்றிச் செயல்படும் ஓர் இயல்பான நாணயம்.

அப்படியும் உரிய இடத்தை அணுகிய போது வெறுப்பின் உத்வேகம் ஊக்கிய ஆவேசமாக ஒரு கணம் வண்டியோட்டத்தை நிறுத்தியே விட்டான். இயக்கு இயந்திரத்தின் மேல் பொருந்திய நடுங்கும் கைகள் மீது தலை குப்புறத் தாழ்ந்தது. முகத்தின் குருதி வற்றியது.

நிமிர்ந்து கொண்டான். ஒரே சுழற்சியில் மோட்டார் அடுத்த வீதியை அடைந்து பதிவு ஆபீஸ் கட்டடத்துக்கு முன்னால், பட்டென்று நின்றது.

''வாருங்கள், வாருங்கள்! கொஞ்சம் நேரமாகி விட்டதே !'' சாட்சிக்காக வந்திருந்தவரின் குரல் வரவேற்றது.

''வழியில் நெரிசல் அதிகம்.''

வாயிலிருந்து பேச்சு தானாக உதிர்ந்தது. அதன் உணர்வின்றியே முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டான்.

அவள் காத்திருந்தாள். அந்தக் காட்சியில் இனமற்ற ஒரு குரூர திருப்தி அவனுள் படர்ந்தது — பெரிய ஒரு குற்றத்துக்குச் சிறு அளவிலேனும் பழி வாங்கிவிட்ட மாதிரி.

நீல நிற எளிய கைத்தறி ஆடைகளில் அவளது இயல்பான கம்பீர நிதானம் தளும்பாமல் நின்றது. தராசுத் தட்டுக்களில் ஈடாக நிரவப்பட்டு நின்றாற் போலிருந்த வடிவ லயம் உயர்ந்து பொலிந்து கொண்டிருந்தது.

வெளிறிக் கலக்கமுற்றிருந்த அவன் முகத்தை அவள் ஏறெடுத்துப் பார்த்தாள். மௌனமாய் அலர்ந்த புன்னகையின் முன் அவன் சட்டென்று குழம்பிப் போய் இதயத்தை மறைப்பவனைப் போல் தலை குனிந்தான்.

''உள்ளேபோவோமா?'' என்றார் நண்பர்.

''ம்.''

அவர் கட்டடத்தை நோக்கி நடக்கலானார். அவனும் திரும்பிக் கொண்டான். அந்நிலையில் அவனுக்கு ஒரு பைத்தியக்கார உந்தல்: அப்படியே திரும்பி ஓடிவிட்டால் என்ன? அவள் ஏமாந்து நிற்பாள். பிறகு மெல்ல மெல்லச் சமாளித்துக் கொள்வாள். இன்னொருவன் அவனுக்குக் கிடைக்காமலா போய் விடுவான்? ஒரு நினைவை அகற்றி விட்டுத் தன்னை மணந்து கொள்ள முன் வந்தவள்தானே ? எத்தனையோ பேர் கிடைப்பார்கள்.

அந்த எண்ணத்தின் கயமை ஒரு கத்தியாக அவன் முதுகில் பாய்ந்துவிட்டாற் போல் அவன் திரும்பிப் பார்த்தான். தன் மேல் ஆழப் பதிந்த அவள் கண்கள் எத்தனை எத்தனையோ திரைகளைக் கிழித்துத் தெரிந்து ஊடுருவுவது போன்ற உணர்வை அவனால் தடுத்துக் கொள்ள முடியவில்லை.

''ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?'' என்றாள் கடைசியில்.

"எதுக்கடா இப்படி உன்னைவிடச் சின்னப் பையனை அடிக்கிறே ?"

"அவன் என்னைவிடச் சின்னப் பையன். அதனாலேதான் !"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

"எப்படியும் இல்லையே !"

அவள் தோற்றமே அமைதியாக இருந்தது. மணமகளுக்குரிய கிளர்ச்சி இல்லை. முதல் அநுபவமா என்ன? அதுதான் அப்படி இருக்கிறாள்.... தான் நஷ்டப்பட்டு விட்டது போன்ற பொருமல் அவனை நிரைத்தது.

"இல்லை. ஏதோ மாதிரிதான் இருக்கிறீர்கள். முகமே நன்றாயில்லை. உடம்புக்கு ஒன்றும் இல்லையே ?"

"ஊஹூம்."

"பின்னே ?"

அவன் சிறிது தயங்கினான்.

"வேறொன்றுமில்லை.... ஏதோ யோசித்துக் கொண்டிருந்தேன்."

அவள் பதிலளிக்காமல் உற்று நோக்கினாள். அந்த மௌனம் அவளுக்குப் பழக்கம். அதுவே ஆயிரமாயிரம் தொனிகளைக் காட்டும். அந்தத் தன்மையை அறிந்திருந்த அவன் சங்கடத்தில் மூழ்கிப் போனான்.

அவன் உதடுகளை ஈரமாக்கிக் கொண்டான். 'என்னைப் போக விடேன்!' என்று சொல்ல நா எழவில்லை. மாறாக, சங்கடத்தை மறைக்கச் சிரிப்பது போல் நடித்துக் கொண்டே, "என்ன யோசித்துக் கொண்டிருந்தேன் என்று உன்னால் ஊகிக்க முடியுமா?" என்று விளையாட்டாய்க் கேட்பவன் போல் கேட்டான்.

அவள் குரலில் விளையாட்டு இல்லை. ஆழ்ந்து நிலைத்த அவள் கண்கள் அவனுடைய உள்ளத்தையே படித்து விட்டனவா ? மிகவும் அமைதியாக அவள் அவனை நேராகப் பார்த்துக் கொண்டு சத்தியத்தின் வீறு ஒலிக்கும் குரலில் பதில் கூறினாள்.

"முடியாமல் என்ன? இரண்டாம் மனைவியாக என்னை மணக்க இருக்கும் உங்களைப் பற்றிய என்னுடைய எண்ணங்களின் மூலமாகவே என்னைப் பற்றிய உங்கள் எண்ணங்களை நான் ஊகிக்க முடியுமல்லவா ?"

மீண்டும் முகத்தைத் துடைத்துக் கொள்ள உயர்ந்திருந்த அவன் கை அந்தரத்தில் நின்று போயிற்று. அதில் பிடியுண்டிருந்த கைச் சீலையின் முனை காற்றில் படபடவெனத் துடித்தது.

பார்வை உறைந்து போய் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த கண்கள் அகன்றன. எதிரே அவளுடைய தளும்பாத உருவம். சத்தியக் குரலில் ஒலித்த அந்தச் சொற்கள்.

மனைவியை இழந்து மறுமணம் புரிந்து கொள்ள விழைந்திருப்பவனின் நெஞ்ச வேரில் அச்சொற்களின் பொருள் பாய்ந்து அங்கு பூகம்பத்தின் அதிர்ச்சியைத் தோற்றுவித்தது.

ஆண் — பெண் ; பழைமை — புதுமை ; சமூகம் — மரபு ; ஒழுக்கம் — கற்பு என்னும் பெயர்களில் வளர்ந்துவிட்ட ஒருதலைக்கோட்பாடு — அதைச் சீராக்க முனையும் சமத்துவ நெறி — அதற்கெல்லாம் மேலே என்றும் தெய்விக வடிவாய் யாவர்க்கும் பொதுவாய் இலங்க வேண்டிய 'நியாயம்' என்ற மகத்தான ஒரு தத்துவம் — இவையெல்லாம் பொறி சிதறும் நட்சத்திரங்களாக அவனது உணர்விலும் அறிவிலும் ஒளி பாய்ச்சி உதயமாகுமாறு அவள் பேசி விட்டாள்.

தன்னை மணந்து கொள்ளும்படி அவளைக் கேட்ட போது அவனுள் நிலவியிருந்த மனப்பான்மை எத்தகைய பண்பட்ட பொருள் என்பதை நினைவுறுத்தும் வகையில் அவன் நெஞ்சை அவள் சாடிவிட்டாள். 'ஆணுக்கொரு நியாயமா?' என்று யோசிக்காமல், மனைவி என்பவளை வெறும் உடைமையாக எண்ணி உரிமை பாராட்டும் கருத்தினால் இடையில் தன்னை வருத்தியிருந்த சிறுமையான எண்ணங்களையும் தயக்கங்களையும் இப்போது அவன் ஒரு சாபக்கேடாக உணர்ந்து தன் ஆணினத்தையே நொந்து கொள்ளுமாறு அவன் உள்ளத்தை அவள் அறைந்து பெண்மையின் மணிக் குரலில் நீதி கேட்டு விட்டாள்.

பிரச்னையின் தன்மையை அவள் வெகு எளிமையாக உணர்த்தி விட்டாள்.

வியக்க வியக்க எந்த அற்புதமும் புற உலகில் நிகழாததைக் கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். வானம் அதிர வில்லை, வையம் பெயரவில்லை. உள்ளே ஒரு தலைகீழ்ப் புரட்டல், ஒரு மின்வெட்டின் கண் கூசும் காந்தி, ஓர் இதயத்தின் புதிய பிறப்பு, ஒரு விச்வரூப தரிசனம் — ஆனால் வெளியே அதே சாமானிய அன்றாடத் தன்மை. வெயிலின் ஏற்றம், சலசலக்கும் மரங்கள், தார் வீதியில் உயிரியக்கம், தொலைவில் எங்கிருந்தோ ஒலிக்கும் வானொலி இசை — எல்லாம் சாதாரணம், சாதாரணம் !

"வருகிறாயா, ஆபீசுக்குள் போகலாம்? காத்துக் கொண்டிருப்பார்கள்."

அவன்தான் பேசினான். மரத்து நின்றிருந்த கை இயங்கி முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டது. நெஞ்சில் கவிந்த வெட்க உணர்ச்சியை மீறி அவனால் அவள் கண்களைச் சந்திக்க முடியவில்லை. அந்தக் கூசலின் காட்சியிலே அவள் தன் அன்பு வென்று விட்டதைப் புரிந்து கொண்டாள்.




தயாரிப்பு:
வாண்டுமாமா

▫ 11 ▫




## உப்பு

விஷத்தைச் சாப்பிட்டால் என்ன நேரும்? மரணம்தானே? ஆனால் நாம் தினம் தினம் விஷத்தைச் சாப்பிடுகிறோம். ஆனால்...? சோடியம் என்று ஓர் உலோகம். இது ஒரு கொடிய விஷம். குளோரின் என்று ஒரு வாயு. இதுவும் பொல்லாதநஞ்சு. தனித்தனியே இவைகளின் குணம் ரொம்ப ஆபத்தானதுதான். ஆனால் ரசாயன முறையில் இவை இரண்டும் ஒன்று சேர்ந்து ஒரு புதிய பொருளாகிறது. அதை நாம் உட்கொள்ளுகிறோம். இல்லை, இல்லை. நம் உணவுக்கே இன்றியமையாதபொருள் அது. அதுவே உப்பு. இப்போது சொல்லுங்கள். உப்பு விஷமா? சற்று அதிகமாகிப் போய்ச் சுவை கெடும்போது, 'ஐயே! ஒரே உப்பு - விஷமாகக் கரிக்கிறது' என்கிறான் குப்பு!



## விடை தெரியுமா ?

'அது ஒரு நீண்ட நேரான தெரு. வீதியின் இருபக்கமும் அழகான நடைபாதை. ராமு வீதியின் ஒரு பக்கத்து நடை பாதையில் நடந்து கொண்டிருந்தவன் திரும்பிப் பார்த்தான். தன் நண்பன் கோபு நானூறு அடி தூரத்துக்கப்பால் தன்னைத் தொடர்ந்து வருவதைக் கண்டான். இப்போது அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்தபடி நின்றார்கள். பிறகு கணக்காக இருநூறு அடிகள் நடைபாதையில் இருவரும் நடந்தார்கள். இருவரும் சந்தித்துக் கொண்டார்கள் என்று முடிப்பேன் என்றுதானே நினைத்தீர்கள்? அதுதான் இல்லை. அவ்விருவருக்குமிடையே இப்போதும் அதே 400 அடிகள் இடைவெளி இருந்தது. எப்படி?

விடை: ஒருவன் பின் பக்கமாகவும், மற்றவன் முன் நோக்கியும் நடந்திருக்கிறார்கள்.

## விளையாட்டு



நூல் சுற்றும் கட்டை, டிராயிங் போர்டு பின், கப் ஐஸ்கிரீம் வாங்கும் போது அதை எடுத்துச் சாப்பிடக் கொடுப்பானே மர ஸ்பூன் அது. சோடாக் கலர் மூடியோ அல்லது பெரிய பித்தானோ. இந்த நான்கையும் வைத்துக் கொண்டு வீட்டுக்குள் இருந்தபடியே பலவிதமான விளையாட்டுக்களை விளையாடலாம்.

நூல் கட்டையின் மையநடுவில் மர ஸ்பூனை டிராயிங் பின்னைக் கொண்டு அழுத்திப் பொருத்து. ஸ்பூனின் அகலமான முனையில் கலர்சோடாவின் மூடியை வை. அது தரைப் பக்கம் தாழும். உயர்ந்து நிற்கும் பக்கத்தை உன் முஷ்டியால் ஒரு குத்து விடு. சோடா மூடி பீரங்கி வாய்க் குண்டு போலத் துள்ளிப் போய் விழும். இனி படத்தில் காட்டியுள்ளபடி ஓர் அட்டையில் பல வளையங்களைப் பல வண்ணங்களில் வரைந்துகொள். ஒவ்வொரு வளையத்துக்கும் அதன்படி எண்களைக் கொடு. நடு மையத்தின் மதிப்பு 25.

இந்த அட்டைக்குச் சற்றுத் தூரத்தில் நீ தயாரித்துள்ள பீரங்கியை வைத்துச் சோடா மூடியால் குறி பார்த்துச் சுடு. மூடி தாக்கும் வளையம் சொல்லும் எண்ணிக்கையைக் குறித்துக் கொள். யார் முதலில் 500 எடுக்கிறார்களோ அவர்கள் வெற்றி பெற்றதாகக் கொண்டு விளையாடிப் பாருங்கள்!

## சேதி தெரியுமா ?



குமாரி கோகிலா ஒரு பிறவிக் குருடு. அவளுக்கு ஆபரேஷன் செய்து கண் கட்டை அவிழ்க்கும் நாள். கண்களை மலர விரித்துப் பார்க்கும் கோகிலாவின் முன்னால் டாக்டர் ஒரு சிவப்பு அட்டையை நீட்டி "இது என்ன வர்ணம் சொல்" என்கிறார். உடனே கோகிலா "சிவப்பு" என்கிறாள்...அங்கு யார் சிரிக்கிறது? கிட்டுவா? அவன் எதற்காகச் சிரிக்கிறான்?

விடை: பிறவிக் குருடான கோகிலாவுக்குச் சிவப்பு வர்ணம் எப்படி இருக்கும் என்றே தெரிந்திருக்காதே! சிரிக்காமல் என்ன செய்வது?





# மோதிர வித்தை!
















மந்திரவாதி மேடை மீது தோன்றுகிறார். அவர் கையில் நாலடி நீளத்தில் ஒரு கயிறு இருக்கிறது. அதன் முனைகளை முடிந்து மாலையாக்குகிறார். பிறகு உங்களிடமிருந்து ஒரு மோதிரத்தை வாங்கி வளையமாக்கிய கயிற்றை இரண்டாக மடித்து அதை மோதிரத்தினுள் நுழைக்கிறார். இப்போது கயிற்றை வேறொருவரின் இரு கட்டை விரல்களிலும் மாட்டுகிறார். மோதிரம் கயிற்றின் நடுவில் ஊசலாடியபடி தொங்குகிறது. (படம் 1) மந்திரவாதி தன் மந்திரக் கோலை ஆட்டியபடியே ''கட்டை விரல்களில் மாட்டிய கயிற்றை எடுக்காமலே மோதிரத்தை இந்தக் கயிற்றிலிருந்து எடுத்து விடுகிறேன்'' என்று கூறிக் கயிற்றை இழுத்துக் கட்டை விரலைச் சுற்றி மேலும் முடிச்சுப் போடுகிறார். ''ஆ, மந்திரக்காளி!'' மோதிரம் 'ணங்' என்று தனியாகத் தரையில் விழுகிறது.

மந்திரமா, மாயமா? இரண்டும் இல்லை. தந்திரமே தான். நீங்களும்கூட மந்திரவாதியாகி இந்த வித்தையைச் செய்யலாமே!

மோதிரத்தைக் கயிற்றில் நுழைத்துக் கட்டை விரல்களில் மாட்டி விட்டீர்களா? மோதிரத்தை உங்கள் வலப் பக்கமாக நகர்த்துங்கள். இரட்டை நூலின் மீது உங்கள் இடக்கரத்தின் ஆள்காட்டி விரலை வைத்துக் கீழுள்ள நூலை வலக்கரத்தால் பற்றிக் கொள்ளுங்கள். (படம் 2). பற்றிய நூலை இழுத்து வலது கட்டைவிரலைச் சுற்றி மாலையாகப் போடுங்கள். (படம் 3). இப்போது வலக் கோடியிலுள்ள மோதிரத்தை இடது பக்கக் கோடிக்கு எவ்வளவு தள்ள முடியுமோ அத்தனை தள்ளி நகர்த்துங்கள். முன்பு பற்றிய நூலை விட்டு மற்றொரு நூலை உங்கள் வலது கையில் பற்றி முன் போலவே வலது கட்டை விரலில் மாலையாக மாட்டுங்கள். (படம் 4) இப்போது மோதிரத்தை உங்கள் வலக் கையில் பற்றிக் கொண்டு நூலில் வைத்துள்ள உங்கள் இடக்கை ஆள்காட்டி விரலை விடுவித்துக் கொள்ளுங்கள். அதே சமயம் மோதிரத்தை உங்கள் பக்கமாக இழுக்கவும் மறக்க வேண்டாம். மோதிரம் கயிற்றிலிருந்து விடுபட்டு உங்கள் கையில் தவழும். கட்டை விரல்களிடையே மோதிரத்தைப் பறி கொடுத்த கயிறு மட்டும் பரிதாபமாகக் காட்சியளிக்கும். ''ஆ, மந்திரக்காளி!'' இப்போது நீங்களும் ஒரு மந்திரவாதிதான் இல்லையா?

காட்டைப் பார்க்க வேண்டும் என்று கிட்டுவுக்கு ரொம்ப நாளாக ஆசை. காட்டுக்குப் போனான். அங்கே மூலைக்கு மூலை புலிகள். அவைகளிடமிருந்து தப்பி ஊருக்குத் திரும்பி வர அவனுக்கு வழி காட்டுங்களேன், பார்க்கலாம்.






சிறுமி: அம்மா, உன் தலையிலே வெள்ளி மயிர் வந்துடுத்து.

அம்மா: பார்த்தியா, குழந்தைகள் அம்மா சொல்வதைக் கேட்காமல் படுத்தினால் இப்படித்தான் தலையெல்லாம் வெள்ளியாயிடுமாம்.

சிறுமி (யோசனையுடன்): ம... இப்பத்தான் புரியறது. பாட்டி தலையெல்லாம் ஏன் ஒரே வெள்ளியாக இருக்குன்னு!



# நந்நாளில் பொலியும் நாகரிகம்

தீபாவளித் திருநாள் நெருங்கி விட்டது. ஒவ்வொரு குடும்பத்திலும் பெண் மணிகள் எந்தக் கலரில் புடவை எடுப்பது அதில் எந்த டிசைனில் பார்டர் இருக்க வேண்டும் என்பன போன்ற பிரச்னைகளில் ஆழ்ந்திருப்பார்கள். குழந்தைகளும் கனவிலும் நினைவிலும் புத்தாடைகள், பட்டாசுக் கட்டுகள் பற்றிய சிந்தனையாகவே இருப்பார்கள். அவர்களுக்கு உதவும் வகையில் இதோ சில யோசனைகள்:

அமரிக்கையான, குடும்பப்பாங்கான பெண்களுக்கு இந்த ஆண்டு நாகரிகம் கட்டம் போட்ட புடவைதான். முதல் படத்தில் குமாரி கே. பி. பிரேமா அணிந் திருப்பது இளம் நீலம், இளம் ரோஸ் பட்டைகள் கொண்ட பட்டுப் புடவை. இப்பட்டைகள் ஒன்று கூடும் இடத்தில் கத்திரிப்பூக் கலரில் கட்டங்கள் பளிச்சென்று துலங்கும். பட்டைகளின் இரு ஓரங்களிலும் ஜரிகை இழைகள் ஓடிப் பளபளக்கும். இளம் நீல நிறத்தில் உள்ள பார்டர் அகலமானது. இதன் மேல் பகுதியில் மட்டும் நெருக்கமான ஜரிகை வேலைப்பாடுகள் உண்டு.

கொஞ்சம் 'மாடர்ன்' ஆகத் தோற்றமளிக்க விரும்புகிறவர்கள் குமாரி டி. கே. விஜயா அணிந்திருக்கும் புடவையைக் கவனிக்க வேண்டும். (படம்-2) உடல் மஸ்டர்ட் கலர். பார்டர் வெகு அகலம், கரும்பச்சை நிறம். பார்டரின் மேல் பகுதி யில் நெடுகிலும் நெருக்கமான ஜரிகைவேலைப்பாடு உண்டு. புடவையில் ஆங்காங்கே



கொத்துக் கொத்தாய் மூன்று நீண்ட சதுரங்கள் தோற்றமளிக்கும் ஒவ்வொரு கொத்திலும் ஒன்றை ஒன்று ஒட்டினாற் போல் உள்ள இந்த நீண்ட சதுரங்கள் சரிகை டிசைனே. இவை புடைவையின் உடலில் மட்டுமின்றி பார்டரின் கீழ்ப்பகுதியிலும் இடம் பெற்றுள்ளதைக் கவனிக்கவும். ரொம்பப் பகட்டாகக் காட்சியளிக்கச் சில நாரிமணிகள் விரும்பலாம். ஆனால் முழு ஜரிகைப் புடைவை வாங்குவதென்றால் ரொம்ப விலையாகும் அல்லவா? மூன்றாவது நாலாவது படங்களில் குமாரிகள் கே. வி. ராதாவும் டி. கே. விஜயாவும் அணிந்துள்ளவை, அசல் 'பனாரஸ் பட்டில்' உடல் முழுவதும் ஜரிகை வேலைப்பாடு செய்யப்பட்ட புடைவைகளே. ஆனால் இவற்றில் உபயோகப்படுவது செயற்கைசரிகை. இந்தச் சரிகையில் பளபளப்பு அதிகம்; கருக்கவும் செய்யாது. விலையும் மலிவு. பூ வேலைப்பாடுகள் நேர்த்தியாக இருக்கும்; சரிகை இழைகள் பிரியவும் செய்யாது.



குழந்தைகள் இந்தத் தீபாவளியின் போது பளபளக்கும் நைலக்ஸ் கவுன் அணிந்து மத்தாப்பூ போலவே ஜொலிக்கலாம்! ரோமி சிதா (அடுத்த பக்கம்) அணிந்திருக்கும் கவுனின் கீழ்ப்பகுதி குடை விரித்தாற் போல் இருக்க இடுப்பில் அதிகமாக ஃபிரில் வைத்துத் தைக்கப் பட்டுள்ளது. கவுனின் இடுப்புக்கும் விளிம்புக்கும் மையத்தில் பட்டுப் பூச்சி போலத் துணியை மடித்து வைத்துச் சுற்றிலும் தைக்கலாம். கவுனின் நிறம் கருஞ்சிவப்பு. உடலில் ஆங்காங்கே சரிகை டிசைன்

உண்டு. சிறுமி சுமதி இரட்டை சரிகை பார்டர் உள்ள பாவாடை உடுத்தி இருக்கிறாள். பட்டுப் பாவாடையின் உடலில் நட்சத்திரங்களாக ஜரிகைப் புள்ளிகள் மின்னுகின்றன. அவள் அணிந்திருக்கும் நைலக்ஸ் ஜாக்கெட்டில் உடல் முழுவதும் இயந்திரத்தினால் செய்யப்பட்ட எம்ராய்டரி வேலைப்பாடுகள் அழகூட்டுகின்றன.



சிறுவர்களுக்கு கருத்த கலரே ஏற்றது. டெரிகாட்டன் துணியில் நிஜாரும் சட்டையும் அணிந்திருக்கிறான் சிறுவன் முரளி. சட்டையில் கலர் நூலில் பூ வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளதைக் கவனிக்கவும்.





நல்ல தீபாவளிக்கு வைர மோதிரம் செய்து போட வேண்டும் என்று மாப்பிள்ளை சொல்வது சம்பிரதாயமாகி விட்டது. இது பற்றி ஹாஸ்யத் துணுக்குகளும் ஏராளம். ஆனால் வைர மோதிரம் கேட்பது ரொம்பப் பழைய நாகரிகம். வருஷத்தில் உள்ள ஒவ்வொரு மாதத்துக்கும் ஓர் அதிர்ஷ்டக் கல் இருக்கிறது. மாப்பிள்ளை பிறந்த மாதத்துக்குரிய அதிர்ஷ்டக் கல் பதித்த மோதிரத்தைத் தருவதோ பெறுவதோ தான் இந்த ஆண்டுத் தீபாவளியின் புதுமை! கல், கண்ணில் படுகிற மாதிரி கவர்ச்சிகரமாக அமைந்திருக்க வேண்டும். படத்தில் நீங்கள் பார்ப்பது டோபாஸ் — பொன் நிறம் — நவம்பர் மாதத்துக்குரிய அதிர்ஷ்டக் கல்!

# நொடிப் பொழுதில் பளிச்சிடும் தூய்மைக்கே...




# நுரைவளமோங்கும் விம்

கடுமை வாய்ந்த, மலிவான தேய்ப்புச் சாதனங்களை நம்பியிருக்க முடியுமா? கண்டிப்புடன் பெற்றிடுவீர் நுரைவளமோங்கும் விம். பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், எதுவாயினும் சரி—விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே. துப்புரவாக்குவதில் அதிக ஆற்றல் வாய்ந்த விம், விடாப்பிடியான பிசுக்குக்கும் விடைகொடுக்கும். துப்புரவான இல்லங்களுக்கு அடையாளம் ஒப்பிலாத விம் ஒளி.
ஓங்கிய ஒளிபெறவே—வாங்குவீர் விம்.

**பாங்கான இல்லங்களிலே-விம், பளிச்சிடும் இல்லங்களிலே விம்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-V.19-140 TM

பல சரித்திர சமூக நாவல்களின் ஆசிரியரான 'ஜெகசிற்பியன்' சென்னை நகரின் சேரி வாழ் மக்களுடைய வாழ்க்கையைத் தத்ரூபமாகச் சித்திரித்து, அவர்களுடைய பாஷையிலேயே பேச வைத்து எழுதிய ஒரு புதுமை நாவல் 'ஜீவகீதம்'.

அறுநூறு பக்கங்களுக்கு மேல் ஓடும் இந்த நாவலில் உள்ள கதாபாத்திரங்களின் எண்ணிக்கை அதிகமாயிருப்பது ஆச்சரியமில்லை. ஆனால் அந்தப் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் முழுமையான உயிர்பெற்று வாசகர்களின் மனத்தில் நிரந்தரமான இடம்பெறும்படி அமைந்திருப்பதுதான் ஆச்சரியம். முக்கியமான கதாபாத்திரங்கள் மட்டுமின்றிச் சிலரைக் கதாபாத்திரங்கள்கூட அவரவர்கள் சுழல வேண்டிய வட்டத்துக்குள் நிறம்படச் சுழன்று தங்கள் தகுதியை நிரூபிக்கிறார்கள். ''துட்டு வாங்கினு தெரு மேலே போய் த்ரீ பைஸ் கேய்ங், த்ரீ பைஸ் வோர்க்கன்னே வாங்கியா!'' என்று ஏவும் கிழ மிஸ்ஸியைக் கூட வாசகர்களால் மறக்க முடியாதவாறு செய்திருக்கிறார் நாவலாசிரியர்.

பர்மா அகதியான சபேசன், சென்னை மாநகராட்சி மன்றத்தில் நச்சியையும், அவனுடைய தங்கை வேதாவையும் தனித்தனியே சந்திக்கிறான். அழுக்குச் சட்டை அணிந்திருந்தாலும், ''உள்ளம் தூயார் பொருந்துவர் எதிர்ந்த ஞான்றே'' என்ற கவியின் வாக்குப்படி, முதல் சந்திப்பிலேயே நச்சியும் சபேசனும் நண்பர்களாகி விடுகின்றனர். ''என்னையே நம்பியவனின் யோக க்ஷேமத்தை நான் நிர்வகிக்கிறேன்'' என்ற பகவானின் கீதையைப் பற்றித் துளிக்கூடக் கேள்விப்பட்டிருக்க முடியாத நச்சி, சபேசனின் நல்வாழ்வுக்குப் பொறுப்பேற்றுக் கொள்கிறான்!

சில காலம் நச்சியின் காதலி ரோஸியின் வீட்டில் இரவு தங்குவதை வாடிக்கையாகக் கொள்கிறான் சபேசன். ரோஸி நம் தேசிய கீதத்துக்கு உரிய மரியாதை செலுத்தாததைக் கண்டு ரகளை செய்துவிட்டு வெளியேறியவன் வாழ்க்கையில் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வந்த ஓர் அகதிக் குடும்பத்தைச் சேர்ந்த சந்தியா குறுக்கிடுகிறாள். வேதா மருதமுத்துவினால் வஞ்சிக்கப்படும் முன் அவளைக் காப்பாற்றுகிறான். மீண்டும் சந்தியாவைச் சந்திக்கும் துரதிர்ஷ்டம் அவனுக்கு நேருகிறது. அவள் தந்தை தேசத் துரோக சதிக் கும்பலில் சம்பந்தப்பட்டவர் என்பதைத் தெரிந்து கொண்டு, அவர் வசம் இருந்த கடிதங்களையும், வரைபடங்களையும் எடுத்துக்கொண்டு ஓடிவரும் போது, சபேசன் அந்தக் கோஷ்டியினரால் சுடப்பட்டு வழக்கப்படி சமயத்துக்கு அங்கு வந்து சேர்ந்த நச்சியின் மடியில் படுத்து, ரேடியோவிலிருந்து மிதந்து வந்த 'ஜன கண மன அதிநாயக ஜயஹே...' என்ற பாரத நாட்டின் ஜீவகீதத்தைச் செவி மடுத்தவாறே கண்ணை மூடிவிடுகிறான். நச்சி ராணுவத்தில் சேர்ந்து விடுகிறான்.




குளிர்ச்சித் தென்றலைப் போல இதமான, மென்மையான ஆனால் வேகமும் விறுவிறுப்பும் கொண்ட நடையில் ஒரு பெரிய நாவலை ஓட்டிச் சென்றுள்ளார் ஜெகசிற்பியன். நச்சியின் தாய் கன்னியம்மாளுக்குக் கோபம் வந்துவிட்டால் 'கய்தே', 'கஸ்மாலம்', 'கைராத்து', 'கர்மம்' என்று ககர வரிசையில் பிரியைக் கட்டி இழுத்து விடுவாள்! நச்சி என்றாவது வீடு திரும்பும்போது அவன் குற்றங்களை மறந்து கடன் வாங்கியாவது அவனுக்கு அமுது படைக்கப் பின்வாங்க மாட்டாள்!

வேதா கன்னியம்மாவால் சொந்தப் பெண் போல் வளர்க்கப்பட்டவள். ''கருமேகப் படலத்துக்குக் கீழ் முளைத்த பிறைநிலவின் அடியில் இரு நீலோற்பல மலர்கள் அசைந்தாடுவது போல் விளங்கிய'' அழகிய கண்களால் சபேசனை வசீகரித்தவள்.



பர்மா அகதி சபேசன் இந்த நாவலின் நாயகன். ஆனால் நாவலின் ஜீவநாடி அவனுடைய உயிர்த் தோழனான நச்சி என்ற நச்சினார்க்கினியன்தான்.

கல்வியறிவு இல்லாதவனேயானாலும் நச்சி உலக அறிவும், தன்னம்பிக்கையும் நிறைந்தவன். நிஷ்காம்ய கர்மாவைப் பற்றி இந்த நச்சி எனும் கண்ணன் கூறுகிறான்: ''எந்தப் பிரதி பிரயோசனத்தையும் எதிர்பார்த்து நான் யாருக்கும் எதுவும் செய்யறதில்லை, தம்பி! ஏன்னா, எனக்கு என் மேலே ரொம்ப நம்பிக்கை. அதுவுமில்லாம, மனுஷனுக்கு மனுஷன் செய்ய வேண்டிய கடமை எப்படி உதவியாவும்?''

நச்சி, அவனை நச்சாதார்க்கும் இனியன். ஆனால் அவனை நச்சாதார்தான் யாருமில்லை! எந்த வேலையைச் செய்யவும் பின்வாங்காதவன் அவன். 'கிஸ்னாயில்' வண்டி இழுப்பான் ஒரு நாள், நடைபாதையில் 'ஷேவிங்' செய்வான் ஒரு நாள், மற்றொரு நாள் காது குறும்பியை எடுத்தே நாலு ரூபாய்கூடச் சம்பாதித்து விடுவான்! எப்பொழுது எந்த வேலை செய்தாலும், நல்லவர்களுக்கும், நலிந்தவர்களுக்கும் உதவத் தயங்கமாட்டான். அவன் பேச்சு, சிரிப்பு, பார்வை, 'அடங்க இஸ்கி' எல்லாமே மறக்க முடியாதவை.

மருதமுத்துவின் பாத்திரம் இன்றைய அரசியல் கட்சிப் பேச்சாளர்களின் ஒரு கேலிச் சித்திரம். பொதுக் கூட்டத்தில் குழப்பம் உண்டாக்க ஆளை அமர்த்துவது; உத்தியோகம், லைசென்ஸ் வாங்கித் தர லஞ்சம் கேட்பது; கோவில் நிலத்தில் திடீர் சேரிகள் முளைக்க உதவி செய்து அதனால் லாபமடைவது—எல்லாமே இன்றைய அரசியல் வாழ்வின் பிரதிபலிப்பாகவே விளங்குகின்றன.

தஞ்சை ஜில்லா மாயூரத்தைச் சேர்ந்த ஜெகசிற்பியன், 19–6–1925ல் பிறந்தவர். தஞ்சாவூரில் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் போதே அவருடைய குடும்பத்துக்குச் சிரமதசை ஏற்பட அவர் படிப்பு முற்றுப்பெறாமலேயே போய் விட்டது. மூன்றாண்டு காலம் அச்சுக் கலை பயின்று சான்றிதழ் பெற்றுள்ள அவர், சென்னை சித்திரக் கலைப் பள்ளியில் சேர்ந்து ஓவியம் பயின்றவர். இவர் முதலாவது ஆண்டு மாணவராக அங்கு இருந்த போது ஓவியர் மணியம் மூன்றாம் ஆண்டு மாணவராக இருந்தார். சினிமா பானர்கள் தீட்டுவதில் பிரபலமான ஓவியர் நடராஜனிடம் சில காலம் பயின்ற இவர் 'சிற்பி' என்ற மாதப் பத்திரிகையை 1947ல் ஆரம்பித்து ஒன்றரை ஆண்டு காலம் நடத்தினார். பிறகு 'சீர்திருத்தம்' பத்திரிகையில் உதவி ஆசிரியராக இருந்துவிட்டு 'சுதந்திரதேவி'க்கு ஆசிரியரானார். சில காலம் ஒரு பதிப்பகத்தை நடத்திய அனுபவமும் இவருக்கு உண்டு. இவருடைய எழுத்தார்வத்தை வளர்த்தவர்களில் திரு எஸ். எஸ். மாரிசாமி முக்கியமானவர். இன்று பிரபல சிறுகதை நாவலாசிரியராகத் திகழும் இவர் ஆரம்பத்தில் 'குருபக்தி' என்ற கட்டுரையை எழுதி முதல் பரிசு பெற்றிருக்கிறார்! இவருடைய முதல் சிறுகதை 1939ல் வெளியாயிற்று. தமிழ் நாட்டின் பிரபல பத்திரிகைகளில் எல்லாம் தொடர்ந்து எழுதி வரும் இவர் இன்று எழுத்தையே வாழ்க்கைத் தொழிலாக அமைத்துக்கொண்டுள்ள மிகச் சில எழுத்தாளர்களில் ஒருவர்.

ஆனந்தவிகடன் நடத்திய சிறுகதைப் போட்டியிலும் நாவல் போட்டியிலும் முதல் பரிசுகளைப் பெற்றிருக்கிறார். 'சொர்க்கத்தின் நிழல்' 'பத்தினிக் கோட்டம்' ஆகிய நாவல்களைக் கல்கியில் எழுதியிருக்கிறார். பத்து சமூக நாவல்களும், எட்டு சரித்திர நாவல்களும், ஒன்பது சிறுகதைத் தொகுதிகளும் சில நாடகங்களும் புத்தக உருவில் வெளியாகி இருக்கின்றன. சுமார் முப்பது ரேடியோ நாடகங்களை எழுதியுள்ள இவருக்கு ஒரு திரைப்படத்துக்கு வசனம் எழுதிய அனுபவமும் உண்டு. இவருடைய பல சிறுகதைகள் ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும், கன்னடத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

''இந்த 'ஜீவகீதம்' நாவலை எழுத உங்களுக்கு எது தூண்டுகோலாக இருந்தது?'' என்று கேட்டேன்.

''1938 முதல் இந்திய அரசியலைக் கவனித்து வருபவன் நான். முப்பதாண்டுகள் காலகட்டத்தைப் பார்த்து வந்துள்ள எனக்கு முதல் பத்தாண்டு காலம் அருள் சுரக்கும் ஆனந்தமாய், வீரச் சுடர் விரிக்கும் வெற்றியின் உருவாய் பொலிவு பெற்று விளங்கிற்று. இரண்டாவது பத்தாண்டில் இந்தியாவின் முகத்தில் பொலிவு குறைந்து மெல்லிய கருந்திரை அதன் மீது விழுந்துவிட்டதை உணர்ந்தேன். மூன்றாவது காலகட்டத்தில் நான் இதுவரை பார்த்திராத பலஜாடைகள் அம்முகத்தில் தெரிவதைக் கண்டேன். இந்த ஜாடைகளில் சில பிடித்தமாக இருக்கப் பல என்னால் சகிக்கக் கூடாதவையாக இருந்து சீற்றமூட்டின. சில அழவும் வைத்துவிட்டன. இந்தப் போக்கை எச்சரிக்கும்வகையில் ஒரு சித்திரம் எழுதிக் காட்ட வேண்டும் என்ற தார்மீக எழுச்சி எனக்குள் ஏற்பட்டதன் விளைவுதான் இந்த நாவல்.''

''சபேசன் நச்சி இரு பாத்திரப் படைப்புக்கள் பற்றி உங்கள் கருத்தைச் சொல்லுங்கள்.''

''சபேசன் பாத்திரத்தின் மூலம் பாரதத்தின் மூன்றாவது முகத்தைக் காட்ட முயன்றேன். அந்தப் பாத்திரத்துக்கு ஊட்ட சத்தாக நச்சியைப் படைத்து சபேசனுடன் உலவவிட்டேன். ஆனால் நச்சியோ அவனைப் படைத்த என்னுடைய அனுமதியில்லாமல் முந்திரிக் கொட்டையாக முண்டியடித்துச் சபேசன் செய்ய வேண்டியவைகளை அவனே செய்து விட்டான்! மெள்ள மெள்ள சபேசனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, அவனே முன்செல்ல ஆரம்பித்து விட்டான்!''

ஒன்றரை ஆண்டுக் காலம் இந்த நாவல் தொடர்ந்து கல்கியில் இடம் பெற்று வாசகர்களிடையே அமோகமான வரவேற்பை அடைந்தது. ''அடங்க இஸ்கி! என்ன 'ஜோக்கா' எழுதராருய்யா!'' என்று நச்சி பாஷையில் பாராட்டி வந்த கடிதங்கள் ஏராளம்!

—மகரம்

கிடைக்குமிடம்: வானதி பதிப்பகம், சென்னை—17. விலை: ரூ. 15—00.

---

**ஜெகசிற்பியன் எழுதும் ''கிளிஞ்சல் கோபுரம்'' என்னும் தொடர்கதை அக்டோபர் 20ந் தேதி கல்கி சிறப்பிதழில் ஆரம்பமாகிறது.**

உங்கள்
வனப்புக்கோர்
வாக்குறுதி
லக்மே
வேனிஷிங்
க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம்




மறையும் போதே மென்மையூட்டும் மாயம் லக்மே வேனிஷிங் க்ரீம்! நிலவும் நிழலும்நிரவலாகும் மென்மை. பட்ட இடத்திலே பாயும் எழில், இட்ட நிறத்திலே ஏறும் மெருகு. சருமத்திற்கு ஈரத் தளிர்ப்பூட்டிக் காக்கும் போதே உங்கள் மேனியெழிலையும் மிகைப் படுத்தும் '' லக்மே கரம் ''

# லக்மே வேனிஷிங் க்ரீம்

Lakmé

ASP/L-37

# இனிக்கும் நினைவுகள்

கோமகள்

## 28. வரம்பு கடந்த சொற்கள்!

“குழலி!'' தோள்களைத் தொட்டாள் தாயார்.

''என்னம்மா?''

''உன் சித்தப்பாவையும், சித்தியையும் நீ மறந்துவிட்டாயா? போய்ச் சொல்லிக் கொண்டு வா, அம்மா! ராகவன் இடிந்து போன சுவராகி விட்டாரடி! நான் வளர்த்தேன், அவரை. நானே இடியவும் வைத்து விட்டேன். துளசி மட்டும்... வெறும் வீம்புக்குப் போராடிவிட்டுக் கணவனோடு போய்ச் சேர்ந்தாள். அவர் துயரத்தில் அவளும் மூழ்கிவிட்டாள். லில்லிதான் என்ன செய்வாள்? சீலியா கல்யாணமே பண்ணிக் கொள்ள மாட்டேன்னுட்டாளாம். அதே இடி அவளுக்கு. இந்த மூன்று பேருக்குமே உன் மேல் பிரியமில்லை என்று சொல்லி விட முடியுமா?... போம்மா, போய் ராகவனோடு பேசிக் கொண்டிருந்து விட்டுத் துளசியையும், லில்லியையும் பார்த்து விட்டு வா...'' என்றாள் தாயார்.

குழலி தயங்கியவாறே எதிர் வீட்டை நோக்கி நடந்தாள். அவளை முதலில் வரவேற்றது முன் தோட்டத்தில் காய்ந்து கிடந்த மலர்ச் செடிகள் தாம். வாசல் திரைகளும், சாளர எழினிகளும் தூசு படிந்து கிடந்தன. உள் ஹாலில் ஒரே அமைதி. ஒருவரையும் காணோம். மாடிப் படிகள் ஒவ்வொன்றிலும் அடி வைக்கும்போதெல்லாம் அந்த வீட்டின் குதூகலச் சூழல் நினைவுக்கு வந்தது. எத்தனை சந்தோஷம் கொழிக்கும், எவ்வளவு மகிழ்ச்சி பெருகி நிற்கும்? எங்கு திரும்பினாலும் குதூகலம் பூத்திருக்குமே! இப்போது புயலின் அமைதி அல்லவா கொந்தளித்துக் கொண்டிருக்கிறது! கடைசிப் படியின் முடிவில் அடி எடுத்து வைத்த போது படுக்கையில் உருவழிந்த தோற்றத்துடன் ராகவன் காட்சியளித்தார்! வேளைக்கொரு உடையும், நேரத்துக்கொரு அலங்காரமுமாக கம்பீர உருவோடு திகழும் ராகவனா இப்படி ஆகி விட்டார்? அவரது கால்களை இதமாக வருடிக் கொண்டிருந்தாள் துளசி. தலை மாட்டின் பக்கம் உட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகத்தை அவருக்குப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தாள் லில்லி. மண்டையில் வண்டு குடைவதைப் போன்ற உபாதையும் நோவும் ஏற்பட்டன குழலிக்கு. ''சித்தப்பா!'' என்று கூவிய குழலி நின்ற விடத்திலேயே சாய்ந்து விழுந்து விடுவாள் போலிருந்தது. லில்லி ஓடிவந்து அவளைப் பற்றி அழைத்துச் சென்று ராகவனின் அருகில்



உட்கார வைத்தான். குழலியின் கண்கள் நீர்க்குளங்களாகி விட்டன.

''அம்மா குழலி! ஏனம்மா அழுகிறாய்? இந்தச் சமயத்தில் உடம்பை நன்றாகப் பார்த்துக் கொள்ள வேண்டாமா? ரொம்பப் பலவீனமாக இருக்கிறாயே!'' என்றார் ராகவன்.

''இல்லே, சித்தப்பா! உங்களைப் பார்த்தும்....'' மேலே பேச முடியாமல் நெஞ்சடைத்தது அவளுக்கு.

ராகவன் அவள் முன்னுச்சி மயிரை ஒதுக்கியவாறே நெற்றியை வருடினார். ''இனி உன் ஒருத்தியால்தான் நம் வம்சம் விளங்க வேண்டும். உடம்பைப் பார்த்துக் கொள். உன் மனத்தில் ரொம்பவும் பலவீனம் பெருகிக் கிடக்கிறது.... உன் கலியாணத்துக்கு வரவில்லையே என்றுதானே நினைக்கிறாய்?... வருத்தப் படாதேம்மா. இங்கிருந்தவாறே என் மனம் கொண்ட மட்டும் உன்னை ஆசீர்வதித்தேன், அம்மா. அதையெல்லாம் நினைத்து வருத்தப் படாதே. எல்லாமே இருந்தும் நான் ஒன்றுமில்லா ஏழையாகி விட்டேன். கடவுளின் அருளுக்காகத்தான் நான் தினமும் உன் சித்தி செய்யும் பூஜையில் கலந்துகொண்டு வருகிறேன்!'' நாத் தழுதழுக்கவே, அவர் பேச்சை நிறுத்தினார்.

குழலியின் நெஞ்சில் ஈரம் படர்ந்தது. சுவர்க் கோடியில் சின்னஞ் சிறு சீலியாவிலிருந்து மங்கைப் பருவம் வரை உணர்த்தும் புகைப்படங்கள் மாட்டப் பட்டிருந்தன. அதோ அந்தப் பட்டமளிப்பு உடையோடு எடுத்த படம் தான் கடைசிப் படமாக இருக்குமோ? ஆயினும் சீலியாவை நினைக்கும்போது அவளுக்கு ஏனோ இரக்கம் ஏற்படவில்லை. சித்தப்பாவின் சுருங்கி வாடிய முகத்தின் சோகமும் வற்றி உலர்ந்த மேனியின் செழிப்பின்மையும், பிறர் மனத்தில்



கனிவை ஊட்டி அனுதாபத்தை வளர்க்கும் புன்னகையும் அவனை ரத்த பாசத்தில் துடிக்க வைத்தன.

''சித்தப்பா! என்னைச் சொல்லி விட்டு நீங்கள் இப்படி வருத்தப்படலாமா? திடமான மனத்தோடு இருக்க வேண்டாமா? உடம்பை நன்றாகப் பாதுகாக்க வேண்டாமா? இப்படி இளைத்துத் துரும்பாகி விட்டீர்களே!''

''உண்மைதானம்மா! அண்ணாவும், அண்ணியும் எப்போதோ ஒரிரு முறை வந்து என்னிடம் கூறும் ஆறுதலை விட நீ கூறுவது ரொம்பவும் இதமாக இருக்கிறதம்மா. இருந்தாலும் இனி இன்னும் எத்தனை நாள்?...''

''சித்தப்பா! இப்படியெல்லாம் பேசாதீர்கள், சித்தப்பா!'' என்று பதறினாள் குழலி.

''டார்லிங்! இதென்ன பேச்சு?'' என்றான் லிஸ்லி.

துளசி எதுவும் பேசாமல் கலங்கிய கண்களோடு குனிந்து கொண்டாள். அவள் கண்ணீர் அவர் கால்களைக் கழுவியது. ராகவனுக்கு எதுவுமே பெரிதாகப்படவில்லை.

கொஞ்ச நேர மௌனத்துக்குப்பின் குழலி விடைபெற எழுந்தாள். ராகவன் கைகளைத் தூக்கி ஆசீர்வதித்தவாறே விடை கொடுத்தார். ''நாளைக் காலையாவது, மாலையாவது நான் நெடுநருக்குப் புறப்பட்டுப் போவேன், சித்தப்பா'' என்று கூறிவிட்டு நகர்ந்தாள் குழலி. லிஸ்லியும் துளசியும் ஒரு தலையசைப்பாலேயே விடை தந்தனர்.

'நல்லவேளை! சீலியாவைப் பற்றி யாரும் பேச்சு எடுக்கவில்லை!' குழலியின் மனத்தில் புறப்படும்போது இந்த நிம்மதி பூத்திருந்தது!

அன்று சப் – சென்டர் ஒன்றுக்குப் போய்விட்டு டவுனுக்குப் போய் வரும் வேலை ஒன்று வசந்தனுக்கு வந்தது. இதை உணர்ந்த சீலியா தானும் நகரத்துக்குப் புறப்பட்டாள். அவளுக்குக் கலைப் பொருள்கள் சில தேவைப்பட்டதே காரணம்.

வேலைகளை முடித்துக் கொண்டு திரும்பும்போது, சுற்றுப்புறத்தின் ரமணீய காட்சிகளில் சீலியா ஒன்றிப் போனாள். அவள் கதை மனம் விழித்துக் கொண்டதா? அல்லது...தலையை அவள் இலேசாகத் திருப்பியபோது ஒரு புன்சிரிப்பு உதிர்ந்தது. சிறு பூவாய், சிற்றலையாய் நெளியும் விழிகளின் விரிவில் அபூர்வ மலர்ச்சி தோன்றியது.

முன்பெல்லாம் சீலியாவின் அன்புக்குப் பாத்திரமாகிவிட்ட பெருமையை எண்ணி எண்ணி வசந்தன் வியந்ததுண்டு. முடிவில், முறித்துக் கொண்டு சென்றவளை நினைத்துத் தன்னையே கசந்து கொண்டதும் உண்டு. ஆனால் மறுபடியும் அவளைக் காணும் சூழலில் உரிமை பெறவோ, பிரதிபலிப்பைக் காட்டவோ அவனுக்கு உரிமையில்லாமல் போய் விட்டது. அவன் உலகின் கௌரவப் பிரஜை. ஆனால் மனம்...?

அன்றொரு நாள், 'உங்களுக்காக நான் திலகமிட்டு மலர்கள் சூடிக் கொள்கிறேன்' என்று சீலியா கூறிய சொற்கள் அவன் நினைவில் புரண்டன. அடி நாள் கனவு சிதைந்த எண்ணத் தவமோ அது? எதை நோக்கி இந்தப் பெண் போய்க் கொண்டிருக்கிறாள்?

'வேன்' புழுதியை வாரி இறைத்தவாறே ஓடிக் கொண்டிருந்தது. சீலியா மனத்தில் கவிதையூற்று சுரக்கவே, இரவின் தனிமையில் அவளுடன் சம்பாஷிக்கும் ஒரு குரலைப் பற்றியும், அவள் தூக்கத்தின் கனவாகப் பூக்கும் ஒரு முகத்தைப் பற்றியும், அவளுக்கே உரித்தான, ஆழமான நடையில் சொல்லிக் கொண்டு வந்தாள். உள்ளோட்டத்தில் இழையும் வார்த்தைகள்; பார்வையூடு சிதறும் ஒளிக் கீற்றுக்கள்; மனத்தில் பீறிடும் உணர்வு ஊற்றுக்கள். வந்த சுருக்கிலும் சரி, அப்புறம் சந்திக்க நேரும் சமயங்களிலும் சரி, அவள் தன் உள்ளத்தைக் கொட்டிப் பிரதிபலிப்பைத் தேடத் தவறவில்லை. அவளது உயர்ந்த மனம் வைராக்கியத்தால் பதப்பட்டுவிடவில்லை. புதிய பிரச்னை புதிய கோணத்தில் உருவாவதைத் தடுக்கும் தெம்பும் அவளுக்கு இல்லை.

வசந்தனின் குவார்டர்ஸ் எதிரில் 'வேன்' நின்றது. மாலையின் மஞ்சள் வெய்யில் அந்தக் கிராமத்தையே பொன் வயலாக்கிக் காண்பித்தது. வசந்தன் இறங்கிக் கொண்டு சீலியாவிடம் உபசாரத்துக்காக, ''உள்ளே வந்து விட்டுப் போங்களேன்!'' என்றான். இதை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தாற் போல் சீலியா இறங்கிப் பின் தொடர்ந்தாள். வசந்தன் கதவைத் திறந்ததும் இருவரும் உள்ளே சென்றனர்.

முன்னொரு முறை அந்த வீட்டுக்கு வந்திருந்த போது அது இருந்த நிலையும், தற்போதுள்ள அலங்கோல நிலையும் சீலியாவுக்கு நன்றாக விளங்கியது. 'இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்ற பழமொழி எத்தனை உண்மையானது! அங்கு குழலி இல்லை. எனவே, எதுவுமில்லை! கொடிகளில் துணிகளின் அலங்கோலம். மேசையில் புத்தகங்களின் அலங்

# ராபின் ப்ளூ உலகத்தில் மிக ஏராளமாக விற்பனையாகும் நீலம்

உலகம் முழுதும் சுத்தமான அல்ட்ரா மரைன் ப்ளூ என்றும், வெண்மை தருவதில் பிரபலமானது என்றும் புகழ்பெற்றது. ராபின் அசல் ப்ளூ ஆனபடியால் உங்களுக்கு இயற்கையில் கவர்ச்சியான வெணமை தருகிறது. அத்துடன் ஒரு பாக்கெட் பல சலவைகளுக்கும் பயன்படுகிறது. மேலும் ராபின் ப்ளூ துணிகளை கெடுக்காது என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

போலிகள் ஜாக்கிரதை. அசல் ராபின் ப்ளூவையே வற்புறுத்திக்கேளுங்கள்.






ராபின் ப்ளூ உங்கள் துணிகளுக்கு இயற்கையில் கவர்ச்சிகரமான வெண்மையை சேர்க்கிறது



ARBC-29 TAM

# சேவைக்கும் பாதுகாப்புக்கும்




பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி



---

## விறுவிறுப்பான தீபாவளி விற்பனை!



புதிய பார்டர்களிலும், கண்ணைக் கவரும் வண்ணங்களில் 9½, 6 கெஜங்களில் ஏராளமான பட்டுப் புடவைகளும் அதற்கு ஏற்றாற்போல் சோளிகளும் தயார் செய்து வைத்துள்ளோம்.

❀

மைலாப்பூரில் ராசியுள்ள கடை

## சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்.

ஸ்தாபிதம்: 1902.

**உயர்தர பட்டு ஜவுளி உற்பத்தியாளர்**

28, வடக்கு மாட வீதி, மைலாப்பூர்,
மதராஸ்-4



எமது கல்கத்தா நிலையம்:

14-A, பார்க் ஸைட் ரோடு, கல்கத்தா-26 (போன்: 46-3976)

கோலம். வசந்தன் அவளை உட்காரும்படி உபசரித்து விட்டு உடை மாற்றிக் கொள்ளப் போனான். கழற்றிய ஷர்ட்டோடு கொடியை நோக்கிய போது வளைக்கரங்கள் ப்ளாஸ்டிக் ஹேங்கரை நீட்டின. ஸீலியாவா ?

''இந்த ப்ளாஸ்டிக் ஹேங்கர் மேசை மீது கிடந்தது.'' இதைக் கூறும் போது அவளது வலிமை வாய்ந்த, கம்பீரத் தோற்றத்தை வெறுமையாகப் பார்க்கும் வெட்கம் அவளைக் கவ்வியது. ரகசியக் கிளு கிளுப்பும் ஏற்பட்டது.

''நன்றி, ஸீலியா !''

வசந்தன் உடை மாற்றிக் கொண்டு வேஷ்டி பனியனோடு மறுபடியும் அவள் எதிரில் வந்தமர்ந்தான். இந்த எளிமையான கோலத்தில் அவனை அவள் காணுவது இதுவே முதல் தடவை. இந்த உடைகூட இத்தனை பொருத்தமாக அமையுமா? குறுக்கும், நெடுக்குமாக அவள் விழிகள் பிடி நழுவி அவனையே சுற்றிச் சுழன்றன. ஆனால் உள் மனத்தில் சாட்டையடி போல் ஒரு வலி. 'இது துரோகம், துரோகம்' என்று அங்கே குமுறல். இந்த நெடுருக்கு வந்ததிலிருந்து ஏற்பட்டிராத ஒரு நெருடல். பழைய எண்ணத்தையெல்லாம் சரமாகக் கோத்துக் கொண்டிருந்தால் அது சாதகமான முடிவுக்கு வந்து விடுமா ? சாதகமா ? அதன் அர்த்தமே குழலிக்குப் புரியும் துரோகமில்லையா ? அவள் முகம் கன்றிச் சிவந்தது.

''ஸீலியா ! உங்களுக்குக் காப்பி வாங்கி வரச் சொல்லலாமென்றால், வேலைக்காரியை இன்னும் காணோம்!'' என்றான் வசந்தன்.

''பரவாயில்லை, வசந்த் ! காப்பிக்காகவா நான் இங்கு வந்தேன்?'' எனக் கூறிய ஸீலியா குறுநகைபூக்க முயன்றாள்.

அவள் புன்னகையின் தயக்கமே அவனைத் திகைக்க வைத்தது. இதயத்தில் உறங்கிக் கொண்டிருந்த உணர்வுகளின் அடி ஆழத்தில் மூடிப் புதைந்திருந்த உண்மையையே அசைவிப்பது போலிருந்தது. அதை மாற்ற அவன் ஏதோ பேசினான். ஆனால் மனங்களின் குறுகிய சந்திப்புக்கு இடம் தரவில்லை. அவனுக்குத் தலையை இலேசாக வலிப்பதுபோல் இருந்தது. பிடித்து விட்டுக் கொண்டான்.

''காப்பிச் சோர்வா?'' என்று கேட்டாள் ஸீலியா.

''ஆம், ஸீலியா !''

'' எங்கே, 'கிச்சனி'ல் காப்பிப் பவுடர் இருக்கிறதா? நான் நன்றாகக்




'' ஓய், உமக்கு மூளையிருக்கா ?''

'' நான் ரொம்ப பிஸியா இருக்கேன். இதுக்கெல்லாம் பதில் சொல்லிண்டிருக்க முடியாது. அதோ அங்கே 'என்கொயரி' இருக்கு. போய்க் கேளுங்கோ!''

---

காப்பிப் போடுவேனே ! பால் இதோ மேசை மேல் இருக்கிறதே ! புதுப் பாலோ ?''

''ஆம். இது இரவில் காய்ச்சிக் குடிப்பதற்கு !''

''இதோ, நான் காப்பி போட்டு வருகிறேன்'' என்று எழுந்தாள் அவள். அவன் தடுக்கவில்லை. பத்து நிமிடங்களில் மணம் கமழும் காப்பி தயாராகிக் கோப்பைகளில் ஊற்றப்பெற்று மேசை மீது வந்து அமர்ந்தது. இருவரும் அமர்ந்து பானத்தை மெல்லச் சுவைத்து உறிஞ்சிக் கொண்டிருந்தனர். மற்றப்படி மௌனமான சூழ்நிலை. உரிமையான பணியால் அவனும், அதைச் செய்த திருப்தியில் அவளும் பூரண மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர்.

''ஸீலியாவா ?'' 'கும்'மென்ற சூழ்நிலையின் அமைதியைக் கலைத்தது குழலியின் குரல்.

இருவரும் திடுக்கிட்டனர். ஸீலியா சட்டெனத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''வா, குழலி ! இப்போது தான் வந்தாயா?'' என்று கேட்டாள்.

''நீ என்னை வரவேற்கிறாயா ?'' குமுறும் சீற்றத்தைக் காண்பித்துக் கொள்ள முடியாத அவமானத்தோடு ஏளனம் உதிர்ந்தது.

ஸீலியா வருத்தத்தோடு சிரித்தவாறே பேச முயன்றாள். ''என்ன குழலி! இப்படிக் கோபப்படுகிறாய்? உட்காரேன் !''

''எனக்கு விளக்கம் தேவையில்லை. என் மூன்று கடிதங்களுக்குப் பதில் வராத காரணம் இப்போது புரிகிறது. அந்தச் சிறுகதை.... அதைப் போல், நீ சாதித்துக் கொண்டு விட்டாய்.''

சட்டெனத் தைத்த முள்ளாகக் குத்தியது அது. ''குழலி! என்னைப்



''பழைய வீடுதான் என்றாலும் நான் வாடகைக்கு எடுத்துக்கறேன். ஒட்டடை இப்படி அடைஞ்சு கிடக்கே, ஒட்டடை அடிக்கப்படாதோ?''

''கூடாது! அந்த ஒட்டடைதான் உத்தரத்தையே தாங்கிண்டிருக்கு!''

---

பற்றி எதை வேண்டுமானாலும் பேசு. உன் கணவரைத் தூற்றாதே நீ...!''

குழலி இடைவெட்டினாள். ''எனக்கு நீ புத்தி கூற வேண்டிய அவசியம் இல்லை. உன்னோடு எனக்கொன்றும் பேச்சில்லை.'' குழலி அடிபட்டாற்போல் சுழன்றாள். ''எனக்குச் சமாதானமே வேண்டாம். நான் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டேன்'' என்றவள் பாதி தாழும் கண்களால் கணவனையே குற்றவாளியாக்கிப் பார்த்தாள். அதில் தன் கட்சியை நிரூபிக்கும் ஆவேசம் கொழுந்து விட்டெரிந்தது. விளக்கம் காணும் ஆசையில்லை!

''உணர்ந்து கொண்டாயா? அது போதும், போ!'' பல்லைக் கடிக்கும் பொறுமை அவனிடம். ''இப்படி நாகரிகமற்ற முறையில் நடந்து கொள்ள உனக்கு வெட்கமில்லை?'' என்று அவன் சன்னக் குரலிலேயே கடுமையூட்டிக் கேட்டான்.

''நான் ஏன் வெட்கப்பட வேண்டும்? நான் ஒன்றும் தவறு செய்துவிடவில்லையே! நான் எதற்காக வெட்கப்பட வேண்டும்?''

வரம்பு கடந்துவிட்ட அவள் சொற்களைக் கேட்ட போது, மழுங்கி மங்கிய கோபம் திட்டிக் கூராகிவிட்டது போல் துடித்தது. சீற்றம் கனலாகக் கண்களில் பொங்கிக் குழலியைத் தாவியது. ''சீ! வாயை மூடு!'' என்று கத்த நினைத்தான் அவன். ஆனால் மீனாட்சிசுந்தரம் அடுத்தாற்போல் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. 'ஐயோ, உலகில் இந்தக் கொடுமையும் உண்டா? மணந்தவளைக் கோபிக்க முடியாத அளவு அவன் அவள் தந்தைக்குக் கட்டுப்பட்டிருந்தான்.... வாயிருந்தும் குழலியிடம் பேச முடியாத நிலை. ரத்தக் குழாய்களில் குபீரெனப் பாய்ந்தது போன்ற தீத் தகிப்பு. அவன் கால்கள் தளர்ந்தன. கைகள் நெரிந்தன. மெய் பனித்தது. மோவாய் நடுங்கத் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். உள்ளுக்குள்ளேயே பொங்கிப் பொங்கிக் கொதித்துக் கொண்டிருக்கும் பாலாக அவன் அமர்ந்திருந்தான்.

அடுத்த சிலையாக நின்றிருந்த சீலியா உதட்டைக் கடித்தவாறே முன் வாயிலுக்கு அடியெடுத்து வைத்தாள். மீனாட்சி சுந்தரம் தலை குனிந்து அமர்ந்திருப்பதைக் கண்ட சீலியாவுக்கு அவரிடம் வலியப் பேசும் தெம்பும் இல்லை; திடமும் இல்லை. அவள் விருட்டென நடந்தாள்.

''அம்மா, குழலி! ஒரு டம்ளர் தண்ணீர் கொடம்மா!'' மீனாட்சி சுந்தரம் குரல் கொடுத்தார்.

வசந்தனுக்கு எழுந்து முன்பக்கம் போய் அவருடன் உரையாடவோ, வரவேற்கவோ தோன்றவில்லை. அந்த நேரத்தில் அவர் முகத்தில் விழிக்கக் கூடப் பிடிக்கவில்லை.

குழலி தண்ணீர் கொண்டு போய்க் கொடுத்து விட்டுத் திரும்பினாள். அவள் பின்னோடு மீனாட்சிசுந்தரமும் அவன் இருக்கும் இடம் வந்தார். அவன் சட்டென எழுந்து கொண்டான்.

''வாழ்வில் ஏதோ ஒரு தோல்வி நேர்ந்திருந்தால் அதையே எண்ணித் தவறுகளை வளர்ப்பதில் அர்த்தமே இல்லை. உங்களுக்குத் தெரியாததில்லை. உம்! நான் வந்த வேளை சரியில்லை. இன்னும் சிறிது நாள் கழித்து வருகிறேன். அப்போது வாசலில் நின்று வரவேற்பீர்கள் எனக் கருதுகிறேன்.... நான் வருகிறேன் வசந்த்....!'' என்று கூறிய மீனாட்சிசுந்தரத்தை அவனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. ''இருங்கள்'' என்று கூறவும் முடியவில்லை. வந்த சுருக்கில் இப்படிப் புறப்படக் கூடியவரல்லவே அவர்! அவருக்கும் அவன் மீது சம்சயமா?

அவன் பதிலை எதிர்பார்க்காமலேயே அவர் நடந்தார். அவர் கூடவே குழலி ஓடினாள். வசந்தன் கண்களை மூடியவாறே நாற்காலியில் சாய்ந்து கொண்டான். சூறைக்காற்று அடித்து ஓய்ந்த அமைதி நிலவியது.

காலடியோசை கேட்டுக் கண் திறந்தான் வசந்தன். குழலி அவனையே பார்த்தவாறு மௌனமாக நின்றிருந்

இதோ உங்கள்
வனப்புக்குப் புதிய பூவிதழ்-மென்மை
தருவது புதிய

# ஹிமாலயா
# புக்கே ஸ்நோ




ரோஜா மணமுடனும்
வருகிறது இன்று



[illegible] லின்டாஸ்-HBS.39-77 TM

சம்பளப் பட்டியல் சேமிப்புத் திட்டத்தின் மூலம் சேமிக்கிறேன்

நான் சேமிக்க விரும்பும் தொகையை, என் சம்பளத்திலிருந்து பிடித்துக் கொள்ளும்படி என் முதலாளிக்கு நான் எழுதிக் கொடுத்து விட்டேன். அவ்வளவுதான். மற்ற விவரங்களை முதலாளி கவனித்துக் கொள்வார்.

இந்த வசதி அலுவலகங்களில் வேலை செய்யும் ஊழியர்களுக்கும் கிடைக்கிறது.

திட்டம் பற்றிய முழு விவரங்களை உங்கள் அருகாமையிலுள்ள தபால் நிலையத்திலிருந்து நீங்கள் கேட்டறியலாம்.






தேசிய சேமிப்பு நிறுவனம்

savp 68/257

தாள். ஒதுக்கப்பட்ட பாவனையைப் புரிய வைக்க முயல்கிறாளா ?

''அப்பா போய் விட்டார். அங்கே வந்து உட்காருங்கள்.'' இதில் ருத்தல் கூடக் கொஞ்சம் கலந்திருந்ததோ ?

கோபமான மௌனம் நிலவியது. மேசை மீது பாதிப் பருகிக் கிடந்த காப்பிக் கோப்பைகள் சற்று முன் நிகழ்ந்த அலங்கோலங்களை நினைவுறுத் தின. நெஞ்சைப் பிழியும் துயரமே கோபமாகக் குமுறி வெடித்தது.

''என்னை இப்படி எல்லோரையும் வைத்துக் கொண்டு அவமதிக்க எத்தனை நாளாகக் காத்திருந்தாய் ?'' அவனது நெருப்புக் கனிகளான விழிகள் அவளை விழித்தன.

அவள் உதட்டைக் கடித்துக் கொண் டாள். ''நானா ? அப்பாவின் எதிரில் நீங்கள் இப்படி அவனோடு....எனக்கு எத்தனை அவமானமாக இருந்தது...?'' அவள் கண்ணீர் கரைய நின்றாள்.

அவனிடம் இரக்கம் சுரக்கவில்லை. அவள் கண்ணீரைத் துடைக்க அவன் கரங்கள் நீளவில்லை. அங்கே மறுபடி யும் ஒரு நிசப்தம். அது வெறும் மௌனமல்ல. அந்த மௌனத்தின் ஆழத்தில் பற்பல யோசனைகள், தீர்வுகள், சிக்கல்கள். அவன் பார்வை அவளை ஊடுருவி ஆராய்ந்தது.

''உன்னை நான் சாதாரணமாக நினைத்திருந்தேன். உனக்குள்ளே இருக் கும் மமதையை நான் இப்போதுதான் பார்க்கிறேன். செல்வச் செருக்கு உனக்கு. உன் அப்பாவின் எதிரில் என் மீது களங்கம் காட்டி என்னை அவமதித்து விட்டாய். உனக்கு விலை யாகிவிட்ட பரிசாக என்னை நீ நினைத்து விட்டாய். இல்லையா ?''

அவள் தன்னை மறைத்துக் கொள் வது போலவேதான் பட்டது அவ ளுக்கு. தன்னை விட்டு வெகுதூரம் விலகி நின்றே ஏமாற்றி விட்டது போன்ற வேதனை. தன் முன் நின்றும் பார்வையை நேருக்கு நேர் சந்திக்கக் கூசும் மலைப்பைப் பார்க்கும் போது, நெஞ்சு தகித்தது.

''நீ ரொம்பக் கெட்டிக்காரி.''

அவள் அவனருகே வந்து, ''உள்ளே வந்து உட்கார்ந்து பேசுங்களேன் !'' என்றாள்.

அவன் உள்ளே வந்து உட்கார்ந் தான். மறுபடியும் அவனே பேசினான். ''பிறர் எதிரில் அவமதித்துவிட்டு என் எதிரில் சரணடைய வந்துவிடுகிறாய்.''

''இத்தனை நாளும் இப்படியா இருந் தேன் ?'' என்று கேட்டாள் அவள்.



ரோடில் நிற்பவர் : என்ன ஸ்வாமி! உங்க பேர்லே மூணு பஸ் ஓடுறதாகக் கேள்விப் பட்டேனே !

மற்றவர் : ஆமாம் ! இப்படி நடுரோடில் நிக்க நீங்களே ! அப்புறம் உங்கபேர்லேயும் பஸ் ஓடி விடப் போகிறது.

---

''எல்லாவற்றையுமே ஒரே வினாடி யில் சர்வநாசமாக்கி விட்டாயே! உன் கணவனின் நட்பிலும், நேர்மையிலும் உனக்கு இத்தனை சந்தேகமா? அதற்கு என் கௌரவம் ஈடா ?'' அவன் பேச் சில் சினம் கொந்தளித்தது.

''என் வாழ்வு எனக்கு உயர் வானது. இனி நாம் இருவர் மட்டு மல்ல; நாம் மூவர் ஆகப் போகிறோம். எனவே, இதை நான் காப்பாற்றவே முனைந்தேன். பிறரின் துராகிருதமான தவறுகளுக்கு என் வாழ்வு பலி யாவதை நான் விரும்பவில்லை. நீங்கள் அவளை.... அவளை மறந்துவிடுங்கள்.''

''சீ ! என்ன சொன்னாய்? மறுபடி யும் உன் சந்தேகத்தையே மெல்லுகி றாயா ?'' விருட்டென்று எழுந்த வசந் தன் அதிர்ந்தான். மின்வெட்டும் நேரத்தில் அவனது ஆத்திரம் கரை கடந்தது. அவனது நெடிய உருவம், தன் முன்னால் கோபமும், ஆக்ரோஷமுமாக நின்று அவள் பார்த்ததே இல்லை. ''இன்னும் நீ என்னை அவமதிக்க ஏதேனும் பாக்கி இருக்கிறதா?'' அவனது ஓங்கிய கரங்கள் அவளை நெருங்கும் போது குழலி வெலவெலத்துப் போய்க் குறுகிக் கண் மூடிக் கொண்டாள். ஆனால் ஒரு நிமிடம் வரை ஒன்றுமே நிகழவில்லை. அவள் கண்கள் விரிந்த போது ஓங்கிய அவனது கரங்கள் தன் கன் னங்களையே அறைந்துகொண்டிருந்தன.

''ஐயோ!'' என்று அலறியவாறே அவன் கைகளைப் பற்றித் தடுக்க முயன்றாள் குழலி.

நான் மனைவியைத் துன்புறுத்தும் பேயனல்ல. எல்லாவற்றுக்குமே தண்டனையடைய வேண்டியவன் நான் தான்.''

'' இப்படியெல்லாம் பேசாதீர்கள்!'' அவள் அவன் கரங்களால் தன் கன்னங்களையே பொத்திக் கொண்டு 'ஹோ' என்று அலறினாள்.

சிறு நடுக்கம் இழையோடும் அவள் கைகளினின்றும் தன் கைகளை அவன் வெடுக்கெனப் பறித்துக் கொண்டான். அவள் திகைப்பும் பதைப்புமாகத் தூர விலகி நின்றாள்.

**வா**னம் ஓர் எழிலரங்காய்க் காட்சியளித்தது. மொட்டவிழ முனையும் மல்லிகையாக வான் நிலா. வான் முற்றத்தில் வாரி இறைத்த நட்சத்திரப் பூக்கள். காற்றையே குளிர் மிதந்து சிலிர்க்கும் இலேசான பனி மூட்டம்.

வெகுநேரக் கேவலுக்குப்பின் குழலி எழுந்து போய் ஏதோ சமைத்தாள். வீடெல்லாம் வெறுமை! வெறிச்சிட்ட வெறுமை. மனமெல்லாம் சூன்யம்! அவள் அறையை எட்டிப் பார்த்தாள். வசந்தனைக் காணவில்லை. தெருப்பக்கம்....? ஊஹூம்! எங்குமே காணோம்! அவள் மனம் பதறியது. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியது. சரிவில் சறுக்கினாற் போன்ற பீதியோடு அவள் தெரு வாயிலிலேயே நின்று மங்கிய தெரு விளக்கின் ஒளியில் வெகு நேரம் சாலையையே பார்த்திருந்தாள். உணர்ச்சிகளின் சம தளத்துக்கு வந்த போது, ஆத்திரத்தில், தான் துளித் துளியாகக் கொட்டிவிட்ட விஷம் போன்ற வார்த்தைகளை எண்ணித் திகில் கொண்டாள். அச்சமும் இரக்கமும் கண்ணீராகக் கொட்டின. **(தொடரும்)**




**திரு ஷேக் அப்துல்லா முன்னிலையில் நியூயார்க்கில் இருக்கும் ஒரு முஸ்லிம் பையனுக்கும், ஸ்ரீநகரில் உள்ள ஒரு பெண்ணுக்கும் ரேடியோ டெலிபோன் மூலமாகத் திருமணம் நடைபெற்றது!** — செய்தி

முஸ்லிம் குடும்பத்தினர் சிலர் திருமணங்களைத் 'தொலைபேசி'யில் நடத்துகிறார்கள்! முஸ்லிம் வழக்கப்படி இருதரப்பினரும் பேசி ஒத்துக் கொண்டாலே போதும்—திருமணம் நடந்ததாகச் சட்டப்படி செல்லும். பெண்களிடையே 'பர்தா' என்ற வழக்கம் இருப்பதால், திருமணச் சடங்கின் போது பெண் இருப்பதில்லை. தன்னுடைய குடும்பத்தைச் சார்ந்த 'வாகில்' என்று அழைக்கப்படும் உறுப்பினர் ஒருவரிடம் மணப்பெண் முன் கூட்டியே திருமணத்துக்குச் சம்மதம் தெரிவித்துவிடுகிறாள். சடங்கின் போது 'காஜி' எனக் கூறப்படும் முஸ்லிம் புரோகிதர்' மாப்பிள்ளையைச் 'சம்மதமா?' எனக் கேட்கிறார். மாப்பிள்ளை, 'நான் சம்மதிக்கிறேன்' என்று மூன்று முறை சொன்னவுடன் திருமணம் நடைபெற்றதாகக் கருதப்படுகிறது.

தொலைபேசி மூலம் நடக்கும் திருமணத்தைப் பொறுத்தவரை, இருதரப்பினரும் திருமண ஆயத்தங்களுக்கு ஒப்புதல் தெரிவித்த பிறகு, பெண் வீட்டாரிடமிருந்து மாப்பிள்ளைக்கு ஒரு 'டிரங்கால்' போடப்படுகிறது. (டிரங்கால் போடுபவர் பிள்ளை வீட்டாராகவும் இருக்கலாம்.) மாப்பிள்ளை இருக்குமிடத்தில் டெலிபோன் மணி அடிக்கிறது. பெண் வீட்டில் இருக்கும் 'காஜி' தொலைபேசியில் மாப்பிள்ளையை, 'முன்கூட்டியே சம்மதம் தெரிவித்துவிட்ட மணப்பெண்ணை நீ திருமணம் செய்து கொள்ளச் சம்மதிக்கிறாயா ?'' என்று கேட்கிறார்.

மாப்பிள்ளை இதற்கு ஒத்துக் கொண்டு, ''நான் சம்மதிக்கிறேன்'' என்று மூன்று முறை சொல்லி, பெண்ணுக்குக் கொடுக்க வேண்டிய ''மெஹர்'' (ஒருவருக்கொருவர் பிரிந்து வாழ நேரிட்டால், கணவன் மனைவிக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க வேண்டும்.) தருவதாகவும் சத்தியம் செய்துவிட்டால், திருமணம் உள்ளபடியே நடந்துவிட்டதாகக் கருதப்படுகிறது. சிக்கனமாகப் பண விரயம் அதிகமில்லாமல், விரைவாக ஒரு திருமணத்தை நடத்தி, இருவரையும் வாழ்க்கையில் இணைத்துவிடுகிறது. '' தொலைபேசி !''

இந்தியச் சட்டத்தின்படி இம்மாதிரி திருமணங்கள் செல்லத்தக்கவைதாம் !

தகவல்: சுதாகரன்

ஆதாரம்: தபால் தந்தி இலாகா வெளியிடும் ''டாக் தார்'' பத்திரிகை.

# சினிமா சிந்தனை

பி. எஸ். ராமையா

## 3

தமிழ்ப் படங்களில் நகைச் சுவைக் காட்சிகள், ''ரசிகர்கள் வெறும் கோமாளிக் கூத்தை ரசிக்கும்முட்டாள்கள்'' என்று நினைத்துச் செய்யும் தரத்தில் இருக்கின்றன என்ற 'ஸ்டார் அண்ட் ஸ்டைல்' பத்திரிகையின் குற்றச்சாட்டுக்குப் பதிலளித்த திருமதி மனோரமா எதெதையோ சுற்றி வளைத்துப் பேசுகிறார். ''நாங்கள் கற்பனை செய்யும் நிகழ்ச்சிகளெல்லாம் முதல் தரமான நகைச் சுவைக் காட்சிகளாக அமைந்து விடுமா? ஒன்றிரண்டு அப்படியும் இப்படியும் இருக்கத்தான் இருக்கும்'' என்று அவர் சப்பைக் கட்டுக் கட்டுகிறாரே யன்றி அவை அர்த்தமற்ற, சுவை மட்டமான கோமாளிக் கூத்துகள்தான் என்பதை மறுக்கத் துணியவில்லை. அதற்குப் பதில் மேல் நாட்டுப் படங்களில் வரும் கோமாளிக் கூத்துக்களை நீங்கள் ரசிக்க வில்லையா? பாராட்டவில்லையா என்று திருப்பிக் கேட்கிறார்.

திருமதி மனோரமா தமிழ்த் திரைப் பட உலகுக்குக் கிடைத்த மிகச் சில சிறந்த நகைச் சுவை நடிகைகளில் ஒருவர். குமரி முனை முதல் கோதாவரிக் கரை வரை பேசப்படும் பல்வேறு வகைப் பாணித் தமிழ்களையும் ஒரு ஸ்வரம் மாறாமல் பேசி நடிக்கும் அதிசயமான திறமை படைத்த நடிகை. அவருக்காகவும் அவரைப் போன்ற நடிக நடிகைகளுக்காகவும் தமிழ்ப் படங்களில் புகுத்தப்படும் நகைச்சுவைப் பகுதி நிகழ்ச்சிகளும், பாத்திரங்களும் அசல் கதையின் பிதற்றல்களின் அளவில்தான் உள்ளன என்பதை அவரால் மறுக்க முடியுமா?

திருமதி எம். எஸ். லீலா அவர்களின் குற்றச்சாட்டு அவருடைய தனிக் குரல் மட்டுமல்ல. நாட்டில் பெரும்பாலான மக்களின் காதுகளும் தமிழ்ப் படங்களில் வரும் சில பாடல்களைக் கேட்டுக் கூசிக் குன்றிப் போகின்றன.

குற்றச்சாட்டுக்குப் பதில் அளித்த கவிஞர் கண்ணதாசன் பாடல் ஒன்றிலிருந்தே 'கல்கி' உதாரணம் கொடுத்திருக்கிறது.

''அறுபத்தேழில் உடம்பைக்கூட
மறைப்பது என்ன?
ஆண்டவன்தான் இதனைப் படைத்தான்
அதிசயமென்ன?''

இந்த வரிகளில் உள்ள கருத்து கேட்பவர் மனங்களில் எத்தகைய கற்பனையைத் தூண்டி விடும் என்பதைப் பற்றி கண்ணதாசன் ஒரு நொடியாவது சிந்தித்துப் பார்த்திருப்பாரா?

தமிழ்நாட்டில் இந்தத் தலைமுறை இளைஞர்களையெல்லாம் ''விடர்''களாக்க இதைவிட எளிய வழிமுறை வேறு இருக்க முடியாது. விடன் மனப் போக்கு வெறியாக மாறுவது தானே அடுத்தபடி! அதற்கும் ''கவிதை''கள் எழுதுவார்கள் போலிருக்கிறது!

''தமிழ் இலக்கியங்களில் இல்லாத எதையும் நானோ பிறரோ சொல்லிவிடவில்லை'' என்று இலக்கியச் சான்றில் மறைவு தேடும் இந்தக் கவிஞர் அடுத்த மூச்சிலேயே, ''அந்த இலக்கியங்களை அதிகம்பேர் படிக்கவில்லை. திரைப்படப் பாடல்களை அதிகம் பேர் கேட்கிறார்கள் என்பதைத் தவிர வேறு வித்தியாசம் இல்லை'' என்றும் விளக்கித் தருகிறார்.

அந்த வித்தியாசம்தான் மிகப் பெரிய வித்தியாசம்; மிக மிக முக்கியமான வித்தியாசம்.

'விறலி விடு தூது' எழுதிய சுப்ரதீபக் கவி, 'திருப்புகழ் பாடிய' அருணகிரி நாதருக்கு மேல் இந்தப் புதுக் கவிஞர்கள் பால் கவர்ச்சி பற்றிப் பச்சையாக எழுதிவிட முடியாது என்பது உண்மைதான். ஆனால் அவற்றைப் படிக்கும்போது இந்தப் புதுயுகப் பாடல்களைக் கேட்கும்போது எழும் கூச்சமும்

திரு ஏ. பி. நாகராஜன்



ஸ்ரீமதி மனோரமா



திரு கண்ணதாசன்



கசப்பும் எழுகின்றனவா? இந்தப் பாடல்கள் எழுதப்படும் நோக்கத்துடனேயேதான் அவை எழுதப்பட்டனவா என்பதை ஒரு நிமிஷம் நிறுத்திப் பார்த்தால் இரண்டிற்குமுள்ள முக்கியமான வித்தியாசம் பளிச்சென்று தெரியும்.

இன்றைய தமிழ்ப் படப் பாடல்கள் நவீன இயந்திரப் பிரசார சாதனங்களின் வழியாக புலன் கவர்ச்சிக் கருத்துக்களை விரும்பி ஏற்கும் பக்குவத்தில் உள்ள மக்களுக்கு நேரடியாக வழங்கப்படுகின்றன.

ஒரு கல்லூரிக்கு அருகில் நானும் ஒரு நண்பரும் பஸ்ஸுக்காகக் காத்து நின்றோம். பல மாணவர்களும் இருந்தார்கள். அந்த வழியாகச் சென்ற மாணவிகளைப் பார்த்து ஒரு காளை மாணவன், ''இடையோடு விளையாட வருவாய் கண்ணு'' என்று பாடத் தொடங்கி விட்டான். பக்கத்திலிருந்த இன்னொரு காளை கண்ணு என்பதைக் கண்ணே என்று மாற்றிக் கொடுத்தான்! இந்தப் புது யுகக் கவிஞர்கள் தமிழ்ச் சமூகத்துக்குச் செய்யும் தொண்டுக்கு வேறு சான்று வேண்டுமா?

மோகம், காமம், ஊன்பசி எல்லாவற்றிற்கும் சகட்டுமேனிக்கு 'காதல்' என்ற பெயர் கொடுத்து, அந்தக் காதலின் ''உடற் கூறுகளைச் சுட்டிக் காட்டுவதால் சமூகம் கெட்டு விடாது'' என்று பதில் சொல்லும் கண்ணதாசன் ''நாங்கள் ஒன்றும் கலைத் தாய்க்குச் சேவை செய்து கொண்டிருக்கவில்லை. தொழில் நடத்துகிறோம்'' என்று அப்பட்டமாக உண்மையைச் சொல்லி யிருப்பதற்கு அவரைப் பாராட்டலாம். ஆனால் அவருடைய பதிலில் உள்ள ''நான்?''

ஒரு படத்துக்குப் பாட்டு எழுதுகிறவர்கள் அந்தப் படத் தயாரிப்பில் ஒரு சிறிய பங்கு உடையவர்கள்தாம். அதில் உள்ள கதை, பாத்திரங்கள், அவர்களுடைய மனப் போக்குகள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றை ஒட்டித்தான் இவர்கள் பாட்டுக்கள் எழுதுகிறார்கள். ஏதோ ஒரு படத்தில் ஒரு பாட்டு எழுதப்பட்டு, அதற்காகக் கதையில் புது நிகழ்ச்சிகள் அமைக்க நேர்ந்திருக்கலாம். ஆனால் கண்ணதாசன் 'படத்தின் வெற்றி தோல்விக்கே பாடல் எழுதுகிறவர்கள்தான் காரணம், பொறுப்பு, பலம்' என்ற குரலில் பதில் சொல்லுகிறார்!

''காம உணர்ச்சியின் விகாரம் தவிர்க்க முடியாதது'' என்கிறார் கண்ணதாசன். மெய். ஆனால் அது தமிழ் மக்களுக்கு மட்டும் ஆன தனி விதி யல்ல. அந்த விகாரம் எங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறது என்று ஒரு சமூகமே நெற்றியில் எழுதி ஒட்டிக்கொண்டு திரிய வேண்டுமா என்ன?

''ஒழுக்கத்தைப் போதிக்கும் நீதி நூலாக ஒவ்வொரு பாடலும் விளங்க முடியாது'' என்பது கண்ணதாசன் வாதம்.

ஐயா கவிஞர்களே! நீங்கள் மக்களுக்கு நீதி போதிக்க வேண்டாம். நெறியைக் காட்ட வேண்டாம். அவர்கள் நெஞ்சங்களில் விகாரத்தைத் தூண்டி விடாமலாவது இருங்கள். அவர்கள் மனத்தில் அழுக்கைக் கொட்டி நிரப்பாமலாவது இருங்கள் என்றுதான் திருமதி எம். எஸ். லீலா போன்றவர்கள் முறையிட்டு வேண்டிக் கொள்கிறார்கள்.

மருந்து மட்டும் கொடுப்பவனுக்குத்தான் வைத்தியர் என்று பெயர். போதைச் சரக்கை விற்பவனுக்கு பெயர் வேறு. இரண்டையும் ஒருவரே செய்யும்போது அவருக்குப் பெயர் இன்னும் வேறு ஒன்று.

கடைசியாக, திருவனந்தபுரம் திரு மணி அவர்களின் அங்கலாய்ப்பு: ''தமிழ் மொழிப் படத்துக்கு ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் கிடைக்க வேண்டும், தங்கப் பதக்கத் தகுதியுள்ள தமிழ்ப் படம் வரவேண்டும்'' என்று ஆசையை வெளியிடும் திரு மணி தாமே அதற்கு வழியும் காட்டுகிறார். ''தமிழ்ப் பட உலகில் புதிய திருப்பம் உடனே வரவேண்டும்.'' அதாவது ''தமிழ்ப் படங்கள் இப்போது உள்ள தரத்தில் தயாரிக்கப்படும் வரை தமிழ்ப் படத்துக்குத் தங்கப் பதக்கம் கிடைக்காது'' என்று சொல்லுகிறார்.

கற்களுக்கு நடுவில் அகப்படும் பருக்கைகள் போன்ற தரமான படங்கள் சிலவற்றைச் சுட்டிக் காட்டி அவற்றிற்குக்கூட ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் கிடைக்காமற் போனது குறித்து ஏமாற்றக் கசப்புடன் பதில் அளித்திருக்கிறார் திரு ஏ. பி. என்.

ஆனால் அவர், ''பதக்கத்துக்குத் தகுதியுள்ளவை என்று நான் குறிப்பிடும் படங்கள் ஒவ்வொன்றும் அமோகமாக மக்கள் ஆதரவும், பாராட்டும் பெற்றுப் பண வசூலிலும் பெரும் வெற்றி பெற்றுள்ளன'' என்றும் சொல்லுகிறார்.

''ஆபாசம் இல்லாமல் படம் எடுத்தால் பணம் வராது, படுதோல்வியாகிவிடும், படம் ஓடாது, நாங்கள்தான் ஓடவேண்டும்'' என்று பேசுகிறவர்களுக்குப் படத் தயாரிப்புத் துறையில் தொடர்ந்து வெற்றி பெற்று வரும் திரு நாகராஜனின் பதிலையும் படங்களையுமே பதிலாகக் காட்டிவிடலாம்.

இந்த சினிமா ''சிந்தனை''யில் மக்கள் என்ற சொல் நிறைய அடிபட்டிருக்கிறது. அந்தச் சொல்லை யார் யார் என்ன பொருளில் உபயோகிக்கிறார்கள் என்பதைத் தெளிவு செய்து கொள்வோம்.

பொதுவாக, நாட்டு மக்கள், தமிழ் மக்கள் என்னும்போது, அது படித்தவர் பாமரர் என்ற இரு தரத்தாரையுமே அடக்கியிருக்கிறது. ஆனால் தமிழ்ப் படத் தயாரிப்பாளர்களும் அதன் பல்வேறு துறையிலுள்ளவர்களும் மக்கள் என்னும்போது பாமர மக்கள் என்ற ஒரே இனத்தைத்தான் மனத்தில் கொண்டு பேசுகிறார்கள் என்பது அவர்கள் சொல்லியிருக்கும் பதில்களிலிருந்தே தெளிவாகத் தெரிகிறது.

அந்தப் பாமர மக்களுக்காக மாத்திரம்தான் அவர்கள் படம் எடுக்கிறார்கள். கூட்டமாகச் சேரும்போது அந்த மக்களுக்குச் சிந்தனைத் திறம் குறைகிறது. எளிதில் உணர்ச்சி வசப்படும் மனநிலையில் இருப்பவர்கள். புலன்களைக் கவரும், புலன்களுக்கு இன்பமளிக்கும், போதை அளிக்கும், வெறியூட்டும் காட்சிகள், நிகழ்ச்சிகள், பேச்சுகள், பாடல்கள், ஆடை அலங்காரங்களை, அவர்கள் தாகத் தவிப்புடன் ஏற்கும் மனப் பக்குவத்திலிருப்பவர்கள். அந்த மனப்

இனிமைசொட்டும் 24

# குலாப் ஜாமுன்களை







## வீட்டிலேயே தயாரிக்க உதவுவது

# ஹிமா குலாப் ஜாமுன் மாவு



**ஒரு பொட்டணம் என்றால் 24.**
தூய்மை மயமான பொருள்களால் கலவை
பெற்றது ஹிமா குலாப் ஜாமுன் மாவு ;
நீர் சேர்த்து, இலேசாகப் பிசைந்து,
24 உருண்டைகளாக்கி, குழிவாணலியில்
பொரித்தெடுக்க இருபதே நிமிடங்கள்.
நெகிழ்ச்சி கொழிக்கும்
குலாப் ஜாமுன்களாகப்
பூரித்துவிடும். சர்க்கரைப்
பாகிலே ஊறவிட்டுப்
பரிமாறவும்.




இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லிண்டாஸ்-HHG. 3.77(RR)TM

பக்குவத்தைத்தான் படத் தயாரிப்பாளர்கள் பணமாக்க முயலுகிறார்கள். லட்சக் கணக்கில் ஒரு பங்கு பணத்தைப் போட்டு அதைப் பல மடங்காகப் பெருக்கி வசூலிக்கத்தான் படங்கள் தயாரிக்கிறார்கள்.

'நீங்கள் இப்படி ஆபாசத்தையும், அழுக்கையும் எளிய மக்கள் கூட்டத்துக்கு விற்று அதில் அடையும் லாபம் பாவப் பணம். அப்படிச் சேர்க்கும் பணம் இரண்டு தலைமுறைக்குக்கூடத் தங்காது' என்றால், 'பாவ புண்ணியத்தை எவன் கண்டவன்? இது பகுத்தறிவு யுகம். இரண்டு தலைமுறைக்குத் தங்காவிட்டால் என்ன? ஏழை எளிய மக்கள் கண்டு ஏங்கிப் பெருமூச்செறியும் போக வாழ்வில் எங்கள்வரை வாழ வழி செய்கிறது இந்தத் தொழில். அது போதும், எங்களுக்கு' என்று பதில் சொல்லுவார்களோ ?

லட்சக் கணக்கில் முதலீட்டுக்குத் துணிந்து படம் எடுக்க வரும் ஒரு தயாரிப்பாளரிடம் பாவ புண்ணியம், நீதி நெறி, தூய்மை, அழுக்குகளைப் பற்றிப் பேசிப் பயனில்லை. அவர்களிடமே அவ்வளவு அழுக்கு ஏறியிருக்கிறது.

தமிழ் மக்கள் நாகரிகம், கலாசாரம், பண்பு என்பது ஆயிரக் கணக்கான வயதுடையது. அவர்களுடைய ரசனையில் அந்தப் பண்பின் வலுவுண்டு. ஆனால் திரு ஆல்பர்ட் பிராங்க்லின் போன்றவர்கள் தமிழ்ப் படங்களைப் பார்த்துவிட்டு அவர்கள் நாட்டுக்குப் போய் தமிழ் மக்களின் இன்றைய ரசனையைப் பற்றியும், பொதுவாகத் தமிழ் மக்களைப் பற்றியும், அவர்களுடைய நாகரிகம் பற்றியும் என்ன பேசுவார்கள், அதைக் கேட்டு அந்த நாட்டில் சிலராவது தமிழ் சமூகத்தைப் பற்றி என்ன எடை போடுவார்கள் என்று நாம் எல்லோரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நம்முடைய நாட்டில் இன்று நடப்பிலுள்ள தணிக்கை முறை இந்தச் ''சிந்தனை''யில் ஒரு முக்கியமான இடம்பெற்றிருக்கிறது. ''வெளி நாட்டுக்காரர்கள் இங்கே ஆபாசங்களைக் கொண்டு வந்து காட்டிப் பணம் திரட்டலாமானால், இந்த நாட்டிலே பிறந்த நாங்கள் மட்டும் அதே ஆபாசங்களை விற்று லாபம் அடையக் கூடாதோ'' என்று கேட்கும் ஒரு கூட்டத்துக்குப் பதில் சொல்லும் தெம்பில்லாத ஒரு 'ஜனநாயகம்' அமைத்துக் கொண்டிருக்கிறோம் நாம்!

'நம்முடைய படங்கள் இவ்வளவு ஆபாசக் களஞ்சியங்களாகிவிட்டனவே, இங்கே தணிக்கைக் குழுக்கள் என்ன செய்கின்றன' என்று மக்கள் சார்பில் குரல் எழுந்தால், ''ஓ! நாங்கள் ரொம்பக் கண்டிப்புடன்தான் தணிக்கை நடத்திப் படங்களுக்கு அனுமதி அளிக்கிறோம்'' என்று பதில் வருகிறது. ''தணிக்கைக்காரர்கள் இந்தியப் படங்கள் விஷயத்தில் மிகவும் கடுமையாக இருக்கிறார்கள். எங்கள் படங்களைத் தலையெடுக்க வொட்டாமல் அடிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று படத் தயாரிப்பாளர்களிடமிருந்து கூக்குரல் வந்தால், ''அப்படி இல்லவே இல்லையே. இந்தியப் படங்கள் விஷயத்தில் மிகவும் தாராளமனப்பான்மை காட்டப்படுகிறதே'' என்று பதில் வருகிறது.

இந்த நிலைமையில் நாட்டில் பரவிக்கொண்டிருக்கும் புற்று நோய்க் கிருமியை விடப் பயங்கரமான இந்தத் தீமை மேலும் பரவாமல் ஏற்கனவே விளைந்துள்ள கேட்டை விலக்கித் தூய்மையாக்க நாம் மேற்கொள்வதற்குள்ள வழி ஒன்றே ஒன்றுதான்.

தீவிரப் பிரசாரத்தினால்தான் மக்களிடை வளர்ந்திருப்பதாக ''அவர்கள்'' சொல்லும் ரசனையை மாற்ற முடியும். 'அது ரசனையேயல்ல. மனிதத் தன்மைக்கு மாறான ஒரு சுவை நிலை' என்பதை மக்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டும். மக்களுக்குச் செய்யும் இந்தப் பிரசாரம் தமிழ்ப் படத் தயாரிப்பாளர்களிடையிலுள்ள ஒருசிலர் மனங்களில் மண்டிக்கிடக்கும் அழுக்கையும் அகற்றும்.

ஐம்பது ஆண்டுகள் தியாகங்கள் செய்து போராடி, நாட்டுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்து, பிறகு இருபது ஆண்டுகள் அரசாங்கம் நடத்திய ஒரு கட்சியையே நாட்டு மக்கள் இரண்டே மாதப் பிரசாரத்தில் தூக்கி எறிந்து விட முடியுமானால், இந்த ஆபாசப் படத் தயாரிப்பாளர்களை மனம் மாற்றுவது பெரும் பாடாகி விடாது.

வாரப் பத்திரிகைகள் ஒவ்வொரு இதழிலும் ஒரு அரைப் பக்கம், தினத் தாள்கள் வாரத்துக்கு ஒரு அரைப் பத்தி இதற்கென்று ஒதுக்கி, இந்த ஆபாசப் படங்கள் மக்களை எத்தகைய இழி நிலைக்கு, விலங்குப் பருவத்துக்கு இழுத்துச் செல்கின்றன என்பதைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டேயிருந்தால் மூன்றே மாதங்களில் தமிழ்த் திரையைத் தூய்மைப்படுத்திவிடலாம். பாமர மக்களும் பண்டிதரும் பார்க்கத் தகுதியுள்ள நல்ல படங்கள் ஒவ்வொன்றாக வர வழி செய்து விடலாம். ஒரே வருஷத்தில் ஜனாதிபதி பதக்கம் மட்டுமல்ல, வேறு எத்தனை பதக்கங்களிருந்தாலும் பெறத் தகுதியுள்ள தமிழ்ப் படம் வர இடம் செய்துவிடலாம்.

இப்போது தமிழ் நாட்டில் பரப்பப்படும் அழுக்கைக் கண்டு எழுந்துள்ள இந்த உணர்ச்சி வெப்பம் தணிந்து விடாமல் மூன்றே மூன்று மாதங்கள் பரப்பப்பட்டால் நிச்சயமாகத் தூய்மை வெற்றி பெறும்.

இருளில் முடங்கிக் கிடந்த இந்திய மக்களை ஒளிமயமான வாழ்வில் கொண்டு சேர்க்கத் தோன்றிய பெருமான் மகாத்மா காந்தி பிறந்த நூற்றாண்டு விழா தொடங்குகிறது. அந்த விழாவில் தமிழ் மக்களைப் பற்றியிருக்கும் இந்தப் பயங்கர நோயை ஒழிப்பதையும் ஒன்றாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். 'காமம், வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக் கெடும் நோய்' என்றார் வள்ளுவர். மூன்றையுமே சேர்த்து மக்களுக்கு விற்க முயலும் சிலர் மனங்களைத் தூய்மைப் படுத்தப் பிரசாரம் தொடங்கிவிட்டது.

ஒரு தனி மனிதனின் ஒரு மனப் போக்கு, அதன் விளைவான ஒரு சிறு நிகழ்ச்சியிலிருந்து தான் ஒரு நாட்டு வரலாற்றையே திசை மாற்றும் பேரியக்கங்கள் வளருகின்றன. இந்த சினிமா 'சிந்தனை'யிலிருந்து அத்தகைய ஒரு நல்ல இயக்கம் வளரட்டும்.

# தீபாவளி கலர்

# — ஈஸ்வரி

நீங்கள் வாங்கி விட்டீர்களா ?

மற்றும் எல்லா

தீபாவளி புதிய கலர்களும் கிடைக்கும்

## கற்பகம் - இந்திரா - சியாமளா

கலர்களுக்கு சரியான ஜோடி புடவையாக இருக்கும்

பட்டுச் சேலைகளுக்கு மட்டுமே
பிரத்யேகமான ஷோ - ரூம்

NALLI SILKS'
— SILK SAREES —




## நல்லி சில்க்ஸ்

82, ராயப்பேட்டை ஹை ரோட்

பின்னியின் அசல் கிரேப் பட்டு மற்றும் ஜார்ஜெட் சேலைகளும் கிடைக்கும்

**விஜயம் செய்யுங்கள் !** - பனாரஸ் பட்டு சேலைகள் மற்றும் பான்சி ரகங்களுக்கு மட்டுமே எமது புதிய ஷோ - ரூம்

நல்லி ஸில்க்ஸ் பனாரஸ் ஹால் — 82, ராயப்பேட்டை ஹைரோடு, லஸ் - மயிலாப்பூர் - சென்னை-4

13-10-68
20-10-68 ஞாயிற்றுக்கிழமைகளில் விற்பனை உண்டு !



# திருமணம் ஒரு கால்கட்டா?

பரிசல் அந்தகமாக நிரம்பிவிட்டது. ஒரு பாம்பாட்டி பாம்பை அடைத்து வைத்திருந்த கூடையுடன் தோணியின் ஒரு மூலையில் அமர்ந்திருந்தான். குரங்காட்டி ஒருவன் தன் குரங்குக் குட்டியுடன் இன்னொரு மூலையில் உட்கார்ந்திருந்தான். துடைப்பம் விற்கும் கிழவி ஒருத்தி ஒரு கட்டுத் துடைப்பங்களுடன் பரிசலில் உட்கார்ந்திருந்தாள். குழந்தை குட்டிகள் சகிதமாகச் சிலர் ஏற்கனவே பரிசலில் ஏறியிருந்தனர். தோணி புறப்படும் நேரத்துக்கு ஓர் இளைஞன் அவசரமாக ஓடி வந்து தோணியின் படியில் கால் வைத்தான். பரிசலோட்டி அவனிடம், ''தம்பி ! நீ பிரம்மச்சாரியாயிற்றே! குறும்பு ஏதாவது செய்து படகைக் கவிழ்த்து விடுவாய். உன்னை ஏற்றிக் கொள்வது ஆபத்து. இறங்கிவிடு!'' என்றான் கண்டிப்பு நிறைந்த குரலில். இளைஞன், ''எனக்கு அவசரமாக மறு கரைக்குப் போய்ச் சேர வேண்டியிருக்கிறது. நான் குறும்பு ஏதும் செய்யமாட்டேன்! ஏற்றிக் கொள்!'' என்று மன்றாடினான். பரிசலோட்டிக்குச் சம்மதமில்லை. ''குரங்காட்டியையும், பாம்புப் பிடாரனையும் ஏற்றிக் கொண்டிருக்கையில் என்னை மட்டும் ஏற்றிக் கொள்ளக் கூடாதா ? நான் நிச்சயமாகக் குறும்பு ஏதும் செய்ய மாட்டேன்!'' என்று இளைஞன் மீண்டும் உறுதியளிக்கவே, ''சரி! வாலைச் சுருட்டிக் கொண்டு அந்தக் கிழவியின் அருகில் போய் உட்கார்ந்து கொள்!'' என்று துடைப்பம் விற்கும் கிழவியைச் சுட்டிக் காட்டினான் பரிசலோட்டி.

தோணி நீரைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது. பரிசல் பாதி ஆற்றைக் கடந்து விட்டது. அதுவரை அமைதியாக உட்கார்ந்திருந்த இளைஞனால் அதற்கு மேல் சும்மா இருக்க முடியவில்லை. அவன் விரல்கள் குறுகுறுத்தன. கிழவியின் துடைப்பக் கட்டிலிருந்து ஓர் ஈர்க் குச்சியை உருவி அதை இரண்டாக ஒடித்து, அதன் கூரான முனையினால் குரங்குக் குட்டியின் முதுகில் குத்தினான்! குரங்கு இங்குமங்கும் பாய்ந்தோடியதில் பாம்பு அடைக்கப்பட்டிருந்த கூடையின் மூடி திறந்து கொண்டது. அவ்வளவுதான்! பாம்பு படம் விரித்தது: படகிலிருந்த பெண்களும் குழந்தைகளும் நடுநடுங்கிப் படகின் ஒரு மூலைக்கு ஓடி ஒதுங்கினர். மறுவிநாடி பரிசல் குடை சாய்ந்து கவிழ்ந்தது ! பிரம்மசாரி ஓடம் கவிழ்த்த கதை இதுதான். குரங்கு, பாம்பு இவைகளையும்விட பிரம்மசாரியால் சமூகத்துக்கு ஆபத்து அதிகம் என்ற பழைய நம்பிக்கைக்குச் சான்றாக விளங்கும் கதை !

இது பழங்கதைதான். இன்று, சமூகத்தில் பிரம்மசாரிகளின் நிலையே வேறு! மக்கள் தொகை அளவுகடந்து பெருகி விடவே, 'பிரம்மசாரிகள் வாழ்க!', 'கல்யாணம் பண்ணியும் பிரம்மசாரியாக வாழ்வாயாக!' என்றெல்லாம் வாழ்த்தும் நிலை ஏற்பட்டுள்ளது. நாற்பது, நாற்பத்தைந்து வயதாகியும் பிரம்மசரியத்தைத் துறந்து இல்லறத்தில் அடியெடுத்து வைக்க விரும்பாத அல்லது துணியாத ஆண்கள் பலரை இன்று சகஜமாகக் காண்கிறோம்.

சிலருடைய இல்வாழ்க்கையில் சோதனைக்கு மேல் சோதனையாகக் கிளர்ந்து வாழ்க்கையே ஒரு பெரும் பிரச்னையாகிச் சூறாவளி வீசுவதைப் பார்க்கும் போது, ''நாமும் இந்த வம்பில் அகப்பட்டுக்கொண்டு விடக்கூடாது. கல்யாணம் என்ற கால்கட்டு வேண்டாம் ; ஒண்டிக் கட்டையாகவே வாழ்க்கையை ஜாலியாக ஓட்டிவிடலாம்'' என்று நினைப்பவர்கள் பலர்.

அப்படி நினைப்பவர்களுள் ஒருவர் திரு பி. ராமமூர்த்தி. மத்தியசர்க்கார் உத்தியோகம், மாதம் ரூ. 360 சம்பளம். பதினைந்து ஆண்டுகள் 'சர்வீஸ்' ஆகியும் இன்னும் திருமணம் செய்து கொள்ளவில்லை. 'வயது முப்பத்தைந்து ஆகியும் ஏன் நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளவில்லை ? உங்கள் பெற்றோர்கள் உங்கள் திருமண விஷயத்தில் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லையா ?'' என்றேன்.

''தகப்பனார் எட்டு வருடங்களுக்குமுன் காலமாகி விட்டார். எனக்கு மூன்று சகோதரிகளும் இரண்டு தம்பிகளும் உள்ளனர். சகோதரிகள் இருவருக்கும் திருமணம் நிறைவேறிவிட்டது. என் கடைசி தங்கை பத்தாவது வகுப்பில் படிக்கிறாள்.....''

''அந்தத் தங்கைக்கும் திருமணத்தை நடத்திவிட்டுப் பிறகு நீங்கள் திருமணம் செய்து கொள்ளலாம் என்று இருக்கிறீர்களா ?'' என்று குறுக்கிட்டுக் கேட்டேன்.

''அப்படி யொன்றுமில்லை. என் தம்பிக்குக் கலியாணம் செய்து வைத்துவிட்டேன். இன்னொரு தம்பிக்கு வயது இருபத்தெட்டு. அவனுடைய திருமணத்தை அடுத்தபடியாக முடிக்க எண்ணியிருக்கிறேன்'' என்றார் ராமமூர்த்தி.







''உங்கள் சொந்த விஷயம்....?'' என்று நினைவூட்டினேன். ''குடும்பத்துக்கு மூத்த பிள்ளை நீங்கள் இருக்க, உங்கள் தம்பி தன் திருமணத்துக்கு எளிதில் ஒப்புதல் அளித்திருக்கமாட்டாரே? அவர் உங்களை வற்புறுத்தவில்லையா?''

''நான் பிடிவாதமாக வேண்டாம் என்று மறுத்து விடவே, என் தம்பி ஒருவாறு சம்மதித்து விட்டான். என் தாயாரும் வற்புறுத்தி வந்தாள். ஆனால், நான் இணங்கவில்லை. இப்போதுகூட நாங்கள் ஒரே குடும்பமாகத்தான் வாழ்ந்து வருகிறோம். என் தங்கை, தாயார், தம்பிகள் இருவர் எல்லோரும் ஒன்றாகவே வசித்து வருகிறோம். எனக்கு ஒரு குறையும் இருப்பதாகத் தெரியவில்லையே?''



'' அம்மா! எனக்கு தூக்கம் வருகிறது. தூங்குகிறேன்! லவ்சீன் வரும்போது எழுப்புகிறாயா?''

'' இப்போது தெரியாமல் இருக்கலாம். ஆனால், வயது முதிர்ந்த காலத்தில் வாழ்க்கைத் துணைவியின் தேவையை நீங்கள் உணரக்கூடும். உங்களுடைய சொந்தத் தேவைகளை உடனிருந்து கவனிக்க மனைவி ஒருத்தி இருக்க வேண்டியது இன்றியமையாதது என்பதைப் பிற்காலத்தில் நீங்கள் உணராமலிருக்க முடியுமா?''

''அதை அப்போது பார்த்துக் கொள்ளலாமே? வயசு காலத்தில் தலையை, காலை வலித்தால் உதவிக்கு ஒருவர் தேவை என்பதற்காக நிரந்தரமாக ஒரு கால்கட்டை இப்போதே தேடிக் கொள்ளுவானேன்?''

''மிஸ்டர், ராமமூர்த்தி! ஒரு சந்தேகம். சிலர் சம்பளம் குறைவாக இருக்கிறது என்ற காரணம் பற்றித் திருமணத்தை ஒத்திப் போடுவார்கள். ஆஸ்துமா போன்ற நோய்கள் இருந்தால், 'நமக்கேன் திருமணம்?' என்று சிலர் இல்வாழ்க்கை வேண்டாம் என்று ஒதுக்கிவிடுவார்கள். நீங்கள் அப்படியில்லை. சம்பளமும் போதிய அளவு கிடைக்கிறது. டேபிள் டென்னிஸ் விளையாடுகிறீர்கள். நல்ல உடற்கட்டும் இருக்கிறது. திருமணத்துக்கு இடையூறாக வேறு எதுவும் உடற்கோளாறு இல்லையே?'' என்றேன்.

''எதுவுமில்லை. திருமணத்தைக் கண்டு நான் நடுங்கும்படியாக ஏதும் நிகழ்ந்துவிடவில்லை. இப்படித் தனி வாழ்க்கை நடத்துவதே எனக்கு நிம்மதியாக இருக்கையில், இல்லறம் என்ற சிக்கல் ஒன்று எதற்கு? இந்த வாழ்க்கைதான் எனக்குப் பிடித்திருக்கிறது. என் குடும்பத்தினருக்கு இன்று என்னால் வெகுவாக உதவி செய்ய முடிகிறது. திருமணம் செய்து கொண்டால் அது ஓரளவு தடைப்படவும் கூடும். இந்த வாழ்க்கையில் எனக்கு மன நிறைவு இருக்கும் போது, நான் ஏன் திருமணம் என்ற கானல் நீரைத் தேடிப் போக வேண்டும்?'' என்று கேட்கிறார் திரு ராமமூர்த்தி.

'திருமணம் வேண்டாம்' என்று விலகிக் கொள்ளும் உரிமை ஆண்களுக்கு மட்டுந்தானா உண்டு? 'ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக' உத்தியோகம் செய்து, பிறர் கையை எதிர்பார்க்காமல் சம்பாதித்து வாழ்க்கை நடத்தும் இந்நாளில் திருமணம் வேண்டாம் என்று ஒதுங்கிக் கொள்ளும் பெண்கள் பலர்.

சிவில் விமானப் போக்குவரத்து இலாகாவில் பதினெட்டாவது வயதில் சேர்ந்து பணியாற்றத் தொடங்கிய குமாரி பவானிக்கு அந்த இலாகாவில் பன்னிரண்டு ஆண்டுகள் சர்வீஸ் பூர்த்தியாயிருக்கிறது. 'நீங்கள் ஏன் இன்னும் திருமணம் செய்து கொள்ளவில்லை?' என்று கேட்டதற்கு, — 'செய்து கொள்ளவே கூடாது என்ற எண்ணமில்லை. என்ன அவசரம்? பார்த்துக் கொள்ளலாம். அதோ, என் அக்கா நீலா இருக்கிறாள். அவளே இன்னும் கலியாணம் செய்து கொள்ளவில்லை. டெலிபோன் இலாகாவில் பதினேழு வருடங்களாகப் பணியாற்றி வருகிறாள். எனக்கென்ன அவசரம்?'' என்கிறார் குமாரி பவானி.

''ஓ! உங்கள் அக்காவின் திருமணம் நிகழட்டும்என்றுதான் காத்திருக்கிறீர்களா?'' என்று கேட்டதும், ''அப்படியுமில்லை. என் கடைசித் தங்கைக்குக் கலியாணமாகிவிட்டது. நல்ல வரனாக அமைந்தது. என் தங்கையை அவர் விரும்பி மணந்து கொண்டார். சிலரைப் போல் வரதட்சிணை இவ்வளவு, சீர்வரிசைகள் இவ்வளவு என்றெல்லாம் எதுவும் கேட்காமல் பெருந்தன்மையுடன் அவரும் அவரது பெற்றோர்களும் என் தங்கையை ஏற்றுக் கொண்டதில் எங்களுக்கெல்லாம் பெருமைதான்'' என்றார்.

''அப்படியானால் வரதட்சிணைக் கொடுமைக்குப் பயந்துதான் நீங்கள் திருமணத்தைப் பற்றி யோசிக்காமல் இருக்கிறீர்களா?'' என்று கேட்டதும் குமாரி நீலா கூறினார்: ''வரதட்சிணையை ஒரேயடியாக நான் எதிர்க்கிறேன் என்பதில்லை. ஏதோ, விலை பேசுவது போலத் திட்டவட்டமாக இவ்வளவு கொடுக்க வேண்டும் என்று வரையறுத்துக் கேட்கிறார்களே — அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. வரதட்சிணைக் கொடுமையைப் பற்றிக் கேள்விப்படும் போதும், பத்திரிகைகளில் படிக்கும் போதும் மனசுக்கு வேதனையாக இருக்கிறது. ஆனால் வரதட்சிணைக்குப் பயந்து நான் கலியாணத்தை ஒத்திப் போடுகிறேன் என்றும் கூற இயலாது. கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும் என்ற அவசியத்தை நான் உணரவில்லை. அது தான் காரணம்.''

''நீங்கள் உணராமல் இருக்கலாம். ஆனால், உங்கள் பெற்றோர்....?''

''இது விஷயத்தில் எங்கள் அப்பாவோ, அம்மாவோ எங்களை வற்புறுத்தவில்லை. எங்களுக்கு முழு சுதந்திரம் அளித்திருக்

கிறார்கள். பாருங்களேன்! நாங்கள் ஐந்து சகோதரிகளுள், மூத்தவளுக்கும் கடைசித் தங்கைக்கும் திருமணம் ஆகி விட்டது. இடையிலுள்ள எங்களைப் பெற்றோர் வற்புறுத்தியதில்லை'' என்றார் குமாரி நீலா.

''அதோ, என் அம்மா. அம்மாவையே கேட்டுப் பாருங்களேன்?'' என்றார் பவானி.

''கடைசிப் பெண்ணின் கல்யாணத்தை முடித்துவிட்டீர்களே? தமக்கைகளின் கல்யாணத்துக்கு அதனால் இடையூறு ஏதாவது....?'' என்று நான் தயக்கத்துடன் கேட்டேன், அவர்களின் தாயாரிடம்.

''குழந்தைகள் சந்தோஷமாக வாழ வேண்டுமென்பதுதான் முக்கியம். அவர்கள் கல்யாண விஷயமாக நான் அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்க விரும்பவில்லை. தங்கள் வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக் கொள்ளும் விஷயத்தில், அவர்களுக்கு ஓரளவு சுதந்திரம் கொடுக்கத் தானே வேண்டும்? பெண்கள் சம்பாதிக்கிறார்கள். அவர்களைவிட அதிகம் சம்பாதிக்கிற கணவனாக அமைய வேண்டும் அல்லவா? கணவனைவிட நாம் கூடுதலாகச் சம்பாதிக்கிறோம் என்ற எண்ணம் பெண்களுக்கு ஏற்படக் கூடாது. கணவனும் மனைவியும் வேலை பார்ப்பவர்களாக இருந்தால், மனைவியைவிடக் கணவன் அதிகம் சம்பாதிக்கிறவனாக இருக்க வேண்டியது அவசியம்'' என்று தாயார் கூறினார்.

''பெண்கள் சம்பாதிப்பதால் குடும்பச் செலவுக்கு மிகவும் வசதியாக இருக்கும். அவர்களுக்குத் திருமணமாகிக் கணவன் வீடு சென்று விட்டால், உங்கள் குடும்பத்துக்கு உதவ முடியாதே என்ற காரணம் பற்றி உங்கள் பெண்கள் திருமணத்தைப் புறக்கணிக்கிறார்களோ?'' என்று அந்த அம்மாளைக் கேட்டதும், ''அப்படியில்லை. அவர்கள் சம்பாதியத்தில்தான் குடும்பம் நடக்க வேண்டுமென்பதில்லை. என் கணவருக்குப் பென்ஷன் வருகிறது. என் இரு பிள்ளைகளும் சம்பாதிக்கிறார்கள். ஆகவே, திருமணத்தை ஒத்திப் போடுவது பொருளாதார அடிப்படையில் இல்லை'' என்றார் அவர்.

குமாரி பவானி குறுக்கிட்டு, ''திருமணத்தைப் பற்றித்தான் நினைக்க வேண்டுமென்பதில்லை. சிந்தனைகள் வேறு எதுவுமே இருக்கக் கூடாதா? நான் எஸ். எஸ். எல். ஸி. தேர்வு பெற்றதுமே வேலையில் சேர்ந்தேன். இப்போது 'ஸ்டெனோ'வாகப் பணியாற்றுகிறேன். எனக்கு கெஜடெட் ஆபீஸராகப் பணியாற்றும் வாய்ப்புக் கிட்டவில்லையே என்று குறையாக இருக்கிறது. வேலையில் சேரும் போது 'இதுவே பெரிய வேலை' என்றுதான் எண்ணியிருந்தேன். 'அப்போதே நான் மேலும் சில ஆண்டுகள் படித்துப் பட்டம் பெற்றிருந்தால் 'ஆபீசர்' பதவிக்கு உயர்வது சுலபமாக இருக்குமே' என்று எண்ணுகிறேன் இன்று'' என்றார்.

திருமண வயதை அடைந்துவிட்டால், கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஒரே பிரச்னைதான் எதிரில் நிற்க வேண்டும் என்பதில்லை; அவரவர்களுக்கு எவ்வளவோ ஆசைகள்! திருமணம் ஒன்றுதானா பிரச்னை?

—'பாணன்'

---

# சிங்கப்பூர் காய்ச்சல்!

கோ. கந்தசாமி



சென்னையிலே வந்ததம்மா சிங்கப்பூரு காய்ச்சல்
சிறுவருக்கும் பெரியோருக்கும் கையும்காலும் ஓய்ச்சல்
என்ன உங்கள் வீட்டுக்குள்ளே எத்தனைபேருக்கென்றே
எதிரில் பார்த்தால் கேட்கிறார்கள் நடுவழியில்நின்றே!

இருபதாயிரம்பேருக்கு ஜுரம் என்றதொரு கணக்கு
எழுத்துமூலம் தருகிறது செய்தித்தாள்கள் நமக்கு
ஒருவரோடு ஒருவர்நின்று பேசும்போது வருமோ?
வீட்டுக்குள்ளே சிறையிலிருக்கும் உபத்திரவம் தருமோ?

பாறுக்கல்லே சுமப்பதுபோல் தலையும் அதிகம்கனக்க
படுக்கையைவிட்டு எழுந்திருக்க உளமும் மிகவும்தவிக்க
யாராவது பார்க்கவந்தால் போகின்றார் ஒதுங்கி
ஆறுவாரம் இருக்கணுமாம் நாமும் இதற்குப்பதுங்கி

ஊரைவிட்டு ஊருஎங்கும் 'டூரு'செய்யும் ஜுரமோ?
உலகில்உள்ள மனிதர்கள்மேல் இதற்குப்பெருத்த கரமோ?
சாறுபிழிந்த சக்கையைப்போல் எறிகிறது தூக்கி
சாந்துக்குடி ஆப்பிளுக்குக் கொடுக்கவேண்டும் பாக்கி!




**பிறந்தது:** ஜப்பானில்.
**வளர்ந்தது:** அமெரிக்காவில்.
**குடியிருப்பு:** சிங்கப்பூரில்.
**இப்போது:** சென்னை விஜயம்.

சென்னை நகரில் "ஃப்ளூ" ஜுரம் பரவி வருகிறது. மூன்று வாரமாகப் பள்ளிகள் எல்லாம் மூடப்பட்டுள்ளன. "ஏர் கண்டிஷன்" வசதி இல்லாத தியேட்டர்களில் காலை, நடுப்பகல் காட்சிகள் தடை செய்யப் பட்டுள்ளன.

1919ம் ஆண்டு பரவிய இந்த ஜுரத்தினால் பலபேர் சென்னை நகரில் மாண்டனர். ஆனால் இம்முறை நல்ல வேளையாக உயிர் ஆபத்து எதுவும் ஏற்படவில்லை.

இந்தக் காய்ச்சலுக்குக் காரணம் ஒருவித "வைரஸ்" அணுக்கள். இவை பலவகைப் படும். இவை மனிதரை மட்டுமின்றி, விலங்கு, பறவைகள், தாவரங்கள், இவைகளையும் பாதிக்கின்றன. ஒரு குண்டூசியின் தலை அளவுள்ள இடத்தில் 10 லட்சம் வைரஸ் கிருமிகளை வைக்கலாமாம்! இவை பாக்டீரியாக் கிருமிகளை விடச் சிறியவை. பாக்டீரியாக் கிருமிகளை விஞ்ஞானிகள் வடிகட்டிவிடுவார்கள். ஆனால் வைரஸ் கிருமிகளை வடிகட்ட விஞ்ஞானிகளாலும் முடியாது! அத்தனை நுணுக்கமானவை.

1898ல் லீப்ளர் என்ற விஞ்ஞானி இம்மாதிரி வைரஸ் இருப்பதைக் கண்டு பிடித்தார். இன்புளுயன்ஸா ஜுரம் பற்றிய முழு விவரங்களை முதன் முதலில் வெளியிட்டவர் ஒயிட்ஸ்கி என்பவர்தான்.

இந்த ஜுரம் வந்தால் சில நாட்கள் அது இருந்துவிட்டுப் போக வேண்டியதுதான். அனுபவித்தாக வேண்டியது தவிர வேறு வழியில்லை. உடம்பு முழுதும் வலி, தலைவலி, தொண்டைக் கரகரப்பு இவையெல்லாம் அதற்கான அறிகுறிகள். வியாதியின் கடுமையைக் குறைக்க மருந்து உண்டே தவிர, வியாதியைக் குணப்படுத்த மருந்து இன்னும் உருவாகவில்லை என்றே கூறப்படுகிறது.

இன்புளுயன்ஸா ஜுரம் ஏற்படுத்தும் கிருமிகளைத் தனியாகப் பிரித்து எடுப்பதில் குன்னூரில் உள்ள 'பாஸ்டர்' ஆராய்ச்சி நிலையம் வெற்றி பெற்றுள்ளது. இவ்விதமாகப் பிரிக்கப்பட்டுள்ள 'ஃப்ளூ' கிருமிகளிலிருந்து 'ஃப்ளூ' தடுப்பு ஊசி தயாரிக்கவும் முயன்று வருகிறது. இப்போது வந்துள்ள ஃப்ளூ ஜுரக் கிருமிகளையும் நோயாளிகளின் ரத்தத்தையும் பரிசீலித்து வருகிறார்கள்.

இந்த விஷ ஜுரம் முதன் முதலில் ஜப்பானில்தான் ஆரம்பித்ததாம். ஆசிய நாடுகளில் அது பரவினாலும் சிங்கப்பூரைத்தான் தன் தாயகமாகக் கொண்டிருக்கிறது.

முதல் உலக மகா யுத்தத்தின்போது இன்புளுயன்ஸா அமெரிக்காவில் தோன்றியது. மெக்ஸிகோ, கானடாவுக்குப் பரவிய பின் ஆப்பிரிக்காவிலும் பரவியது. சுமார் 2 கோடி மக்கள் இதற்குப் பலியானார்கள். ஜெர்மானியர்கள் விஷக் கிருமிகளைப் பரப்பிவிட்டிருக்கலாம் என்று அப்போது நம்பப் பட்டது. ஆனால் ஜெர்மனியிலும் இந்த விஷ ஜுரம் பரவியிருந்ததால் இந்தச் சந்தேகம் அடிபட்டுப் போயிற்று.

இந்த ஜுரம் பரவாமல் இருப்பதற்கு அமெரிக்கர்கள் முகமூடியை உபயோகித்தனர். யாரைப் பார்த்தாலும் முகமூடிதான். இரண்டு உலக மகா யுத்தங்களில் இறந்தவர்களைக்காட்டிலும் இந்நோயால் இறந்தவர்களின் எண்ணிக்கை அதிகம்.

1919ல் இந்நோய் சென்னையில் பரவிய போது சோடாக் குடித்தால் நல்லது என்று டாக்டர்கள் சிபாரிசு செய்ததால் 'சோடா'ப் பஞ்சம் ஏற்பட்டு விட்டது.

இதன் பிறகு 1928லும் 1957லும் இந்த ஜுரம் சென்னையில் பரவியிருந்தது. இந்தத் தடவை செப்டம்பர் 8ந் தேதி முதல் இந்நோய் பரவுவது கண்டுபிடிக்கப்பட்டது.

ஃப்ளூ ஜுரத்துக்கு உடலில் எதிர்ப்புச் சக்தி உருவாவதில்லை என்று சில டாக்டர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். உதாரணமாக அம்மை குத்திக் கொண்டால் அடுத்த சில வருஷங்களுக்கு அந்தபருக்கு அம்மை மறுபடியும் வராது என்கிறோம் அல்லவா? அப்படி ஃப்ளூ ஜுரத்துக்குச் சொல்ல முடியாது. வந்தவருக்கே வரும், மற்றவருக்கும் பரவும்! பொல்லாத நோய் இது!

'ஆடாதோடை, கடுக்காய் இலைகளைக் கஷாயம் வைத்துச் சாப்பிட்டால் இன்புளுயன்ஸா என்ன, எப்பேர்ப்பட்ட ஜுரமானாலும் பறந்துவிடும்' என்கிறாள் பாட்டி. அக்காலத்து மனுஷி சொல்லை இப்போது யார் கேட்கப் போகிறார்கள்?

—நஜன்



# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 43

### அரும்பு மலர்ந்தது

குயிலி திகைத்தாள். ஏ மனமே, ரொம்ப ஓடாதே. அவன் அறிவில் மயங்குகிறாயா அல்லது அவன் அழகைப் பார்த்து ஆசைப்படுகிறாயா? எதுவாய் இருந்தால் என்ன? இரண்டும்தான். உன்னை நாட்டியக்காரி ஆக்க வேண்டும் என்று அவனுக்கு என்ன அக்கறை? உன் பாட்டைக் கேட்டால் அவன் முகத்திலே அன்பு பழுக்குது. உன் ஆட்டத்தைப் பார்த்தால் அவன் கண்களில் ஆனந்தம் நடனமாடுகிறது... அவன் யார்? நீ யார்? உனக்கும் அவனுக்கும் என்ன உறவு? விட்ட குறை தொட்ட குறையாக இருக்குமோ?

இல்லை. விட்ட குறையுமல்ல; தொட்ட குறையுமல்ல. பிறக்கக் கூடாத இடத்தில் பிறந்தவள் நீ. இல்லாவிட்டால் இப்படி கிளைக்குக் கிளை தாண்டுவாயா? அன்றைக்கு ராஜாவின் ரோஜாப் பூவில் ஆசைக் கடலில் விழுந்தாய். எட்டி எட்டிச் சென்றவனை எட்டிப் பிடிக்க நினைத்தாய். இன்று சிங்கனின் சிரிப்பில் மயங்குகிறாய்.

நான் மயங்கினேனா? கிளைக்குக் கிளை குயிலும்தான் அமர்ந்து பாடுகிறது. அதனால் குயிலுக்கும் குருவிக்கும் கலியாணம் நடந்து விடுமா?

இந்த எண்ணமெல்லாம் எனக்கு எதற்கு? சிங்கன் எங்கே? எங்கே அவனைக் காணோம்? இவ்வளவு நேரமா மத்தளத்துக்குச் சாதம் போடுகிறான் என்று குயிலி தன் கண்களை நாலா புறத்திலும் தேட விட்டாள். அந்த இரவு நேரத்தில் எதிர்க்கரையில் உள்ள படிக்கட்டின் மேல் மத்தளத்தைத் தலைக்கு உயரமாய் வைத்துக் கொண்டு அவன் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

கும்பகோணத்தில் ஒரு குறுகிய சந்து. சந்தின் இரு புறங்களிலும் சேலை நெய்பவர்கள், சாயம் தோய்த்த நூலைச் சேலைக்காகப் பரப்பி வண்ண வண்ணத் தோரணங்களால் அலங்காரம் செய்தது போல இரு புறங்களிலும் பாவு நூல் காயப் போட்டிருந்தார்கள். நடுவில் ஓர் வீட்டு வாசலில் குயிலி பாடிக் கொண்டிருந்தாள். சிங்கன் மத்தளம் வாசித்துக் கொண்டிருந்தான். இன்று பாட்டோடு பாலுக்குச் சர்க்கரை போட்டது போல் ஆட்டமும் கலந்து நின்றது. பாட்டும் ஆட்டமும் கலந்தால் கூட்டம் கூடாதா? சின்னத்தம்பி சில்லறை வசூலில் ஈடுபட்டிருந்தான். அப்பொழுது தெருவில் கிழக்கு முனையில் இரண்டு வைக்கோல் வண்டிகள் தெருவை அடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தன. குயிலியின் கூட்டத்தைப் பார்த்து விலகு விலகு என்றான் வண்டிக்காரன். இதைக் கேட்டு குயிலியும் சிங்கனும் மேற்குப் பக்கத்தில் போக ஆரம்பித்தனர். என்ன ஆச்சரியம்! மேற்கிலிருந்தும் இரண்டு வைக்கோல் வண்டிகள் வந்தன. மேற்கு வண்டிக்காரன் கிழக்கிலிருந்து வருவோனைத் திட்டினான்.

“நான்தான் ஐயா முதலில் நுழைஞ்சேன்” என்று கீழ்ப்புறம் வழியாக வந்தவன் எதிர் வண்டிக்காரனைத் திட்டினான். இந்தச் சண்டையின் சுவாரசியத்தில் குயிலியும் அவள் கூட்டத்தினரும் ஈடுபட்டிருந்தார்கள். ஆனால் சிங்கன் மட்டும் சந்தேகக் கண்ணுடன் வண்டியைக் கவனித்தான். குபீர் குபீரென்று வைக்கோல் கட்டுகள் ஆகாயத்தில் சிதறின. இரண்டு வண்டிகளிலிருந்தும் முப்பது ஆட்கள் கீழே குதித்தார்கள். குயிலியை நோக்கி

விரைந்து வந்தார்கள். சிங்கனின் கை பளீர் பளீர் என்று தன் மத்தளத்தில் மூன்று ததிங்கிணதோம்களை வைத்தது. மத்தளத்தைக் கழற்றி இரு கைகளாலும் இறுகப் பிடித்துக் கொண்டு ஆவேசமாகத் தூக்கி வந்தவர்களின் மண்டையில் பொத்தினான். மத்தளம் சிலம்பம் ஆயிற்று. அதன் நாடாவைக் கையில் பிடித்துக் கொண்டு பம்பரம் போல் அவன் கரகரவென்று சுழன்ற வேகத்தில் பல எதிரிகள் மத்தளத்தின் அடி தாங்காமல் பொத்பொத்தென்று விழுந்தார்கள். சின்னத் தம்பியும் மற்ற பையன்களும் அரக்கரின் சேனைப் படையை எதிர்த்த குரங்குப் படைகளைப் போல் கூட்டத்தில் புகுந்து எதிரிகளைச் சாடினர்.

''அடேய், காட்டு ராசாவின் வண்டிக்காரண்டா'' என்று எதிரிகளில் ஒருவனைப் பார்த்துச் சின்னத்தம்பி கத்தினான். காட்டு ராசா என்ற வார்த்தையைக் கேட்டவுடன் வேடிக்கை பார்த்த கூட்டம் வீடுகளுக்குள்ளே ஓடி மறைந்தது. கதவுகள் படீர் படீரென்று தாளிடப்பட்டன. முப்பது பேர்களுக்கு முன்



குயிலியும் அவன் படைகளும் என்ன செய்ய முடியும்? எதிரிகளில் ஒருவன் குயிலியை அலாக்காகத் தோளில் தூக்கினான். குயிலி 'ஹோ' வென்று கதறினாள். அவன் குயிலியைத் தோளில் தூக்கியவாறு ஓட முயல்கையில் அவன் கழுத்தைச் சிங்கனின் கரங்கள் நெரித்துக் கீழே தள்ளின. சிங்கன் அவனைப் பந்தாடினான். ஆட்டு மந்தையில் புகுந்த புலியைப் போல அத்தனை பேர்களையும் அவன் ஒருவனாகவே எதிர்த்து நிற்கையில் அவனுக்குப் பின்புறமிருந்து எதிரிகளில் ஒருவன் ஒரு நுகத்தடியால் சிங்கனின் தலை மீது ஓங்கி அடித்தான். சிங்கன் திகைத்தான். தள்ளாடினான். கீழே விழப் போகையில் குயிலி அவனைத் தாங்கிக் கொண்டாள். அப்பொழுது எங்கிருந்தோ படபடவென்று குதிரைகள் வேகமாக வரும் குளம்பு ஓசைகள் கேட்டன. இரு புறமும் இருந்த வைக்கோல் வண்டிகளின் மீது பல தஞ்சை வீரர்கள் தாவி வந்து கீழே குதித்தார்கள். அந்த வீரர்கள் கூட்டத்தில் குருட்டுப் பிச்சைக்காரன் வேஷத்தில் நாம் கண்ட சர்க்கரையும் இருந்தான். கண நேரத்தில் அத்தனை எதிரிகளும் அந்த வீரர்களால் கைது செய்யப்பட்டார்கள். ''கொல்லம் பட்டரைக்காரன் எங்கள் குதிரைகளையெல்லாம் குருத்தில் ஆணி அடித்து நொண்டியாக்கி விட்டான். இல்லாவிட்டால் உங்க கையிலே பிடிபடுவோமா?'' என்று முணு முணுத்தான் எதிரிகளின் தலைவன்.

விழுந்து கிடந்த சிங்கனை நோக்கி ஓடிவந்தான் சர்க்கரை. ''ஐயோ!'' என்று அலறிக் கொண்டே குயிலியின் மடியில் கிடந்த சிங்கனைத் தன் இரு கைகளாலும் வாரி எடுக்கப் போனான் அவன். சிங்கனின் விழி திறந்தது. ஒரே பார்வை. அந்த ஒரு பார்வையில் சர்க்கரை தன்னைச் சமாளித்தான்.

''ஏ, பொண்ணே, இந்த ஆளுக்கு அடிபட்டிருக்குதா பாரு'' என்று முன் பின் தெரியாதவனைப்போலப் பேசினான். இதற்குள் எங்கிருந்தோ ஒரு செம்பில் தண்ணீரைக் கொண்டு வந்து சிங்கனின் முகத்தில் தெளித்தான் சின்னத்தம்பி.

''என்னய்யா ராசாங்கம் நடத்துறீங்க! நீங்கள் எல்லோரும் காவல் காக்கும் வீரர்களா? ஒரு பொண்ணு பாடிப் பிச்சை எடுக்கக் கூட இந்த ஊரிலே பாதுகாப்பு இல்லையே!'' என்றான், சிங்கன்.

''சிங்கா! அவுங்களை ஒண்ணும் சொல்லாதே. சமயத்திலே அவுங்க வரல்லேன்னு நானும் நீயும் இந்நேரம் ஊரோட கைலாசம் போயிருப்போம். ஐயா, உங்களைக் கும்பிடுறேனுங்க'' என்றாள் குயிலி.

சர்க்கரையின் கண்கள் கலங்கின. ''பெண்ணே கவலைப்படாதே. அந்த ஆளுக்கு அடி ஒண்ணும் பலமாப் படலே. எதற்கும் சட்டியிலே உப்பைப்போட்டு வறுத்து உடம்பெல்லாம் ஒத்தடம் குடு. உள்மைக்காயம் பட்டிருந்தா ஆறிப் போகும்'' என்றான் சர்க்கரை.

''ஒத்தடம் வேண்டாம். அது சுடும். உன் கையாலே உடம்பைக் கொஞ்சம் தடவிக் கொடு'' என்று ஈன ஸ்வரத்தில் கூறினான் சிங்கன்.

''ஆமாம், ஆமாம். ஒத்தடம் சுடும். கைச்சூடு கதகதப்பா இதவா இருக்கும்'' என்று குறும்புடன் சொல்லிவிட்டுச் சிங்கனைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினான் சர்க்கரை. சிங்கனின் தலையிலும் முகத்திலும் அவனது தோள் பட்டைகளிலும் ஆவலோடு தன் கையால் தடவிக் கொடுத்தாள் குயிலி.

'' அம்மா .... அம்மா .... இன்னும் ரெண்டு அடி அடிக்காம விட்டாங்களே. குயிலி, உனக்கு ஏதாவது காயம் பட்டுதா?'' என்றான் சிங்கன்.

''அதுதான் என் மேலே விழ வேண்டிய அடியை நீ வாங்கிக்கிட்டயே. நான் யாரோ, நீ யாரோ. என்னாலே உனக்கு ஏன் கஷ்டம் வரணும்?'' என்று குயிலி கூறியபோது அவள் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் கொட்டியது.

''அழாதே குயிலி, அழாதே! உன் ஒரு பிர்க்காவுக்காக என் உயிரையும் கொடுப்பேன். உன் ஒரு பாட்டுக்கு இன்னும் பதினாயிரம் அடிகள் வேண்டுமானாலும் படுவேன்'' என்று சொல்லி விட்டுத் தன் ஆள்காட்டி விரலால் குயிலியின் கண்களில் வடிந்த கண்ணீரைத் துடைத்துத் தரையில் சுண்டினான் சிங்கன். தரையிலே விழுந்த அந்தக் கண்ணீர்த் துளிகளில் அதே கணத்தில் கண்ணுக்குத் தெரியாமல் ஓர் காதல் அரும்பு மலர்ந்து மணம் கமழ்ந்தது.

ஃ ஃ ஃ

**கா**ட்டு ராஜாவின் கூட்டம் சிதம்பரத்துக்கு அருகில் உள்ள கொள்ளிடம் காட்டில் குடிபுகுந்தது. நல்ல மரங்களுக்கிடையே கெட்ட மனிதர்கள் வாழ்கிறார்கள் என்பதற்காக மரங்கள் நிழல் தர மறுக்கவில்லை. காட்டு ராஜா ஒரு மணல் மேட்டின் மேல் அமர்ந்திருந்தான். அவனுடைய படை வீரர்கள் அவனைச் சுற்றிக் கைகட்டி வாய் பொத்தி நின்றார்கள். எதிரில் நின்ற புளிய மரத்தில் ஒருவன் கட்டப்பட்

# பல்வேறு துறைகளின் முன்னேற்றத்திற்கு ஹோமி பாபா ஃபெலோஷிப்ஸ்



**எஃகுத் தொழில்துறையில் டாக்டர் ஹோமி பாபாவிற்கு உள்ள ஆர்வமானது, உலோகத்தைப் பிரித்தெடுக்கும் முறையின் சீர்பாட்டிற்கும், கட்டுப்பாட்டிற்கும் ரேடியோ-ஆக்டிவ் இயல்புள்ள அணுக்களின் உதவி எந்த அளவு பயன்படும் என்பதை வலியுறுத்தத் தூண்டியது. அவரை கௌரவிக்கும் பொருட்டு பிரதமர் இந்திரா காந்தி, டிராம்பே அணுசக்தி நிலையத்தின் பெயரை 'பாபா அணுசக்தி ஆராய்ச்சி நிலையம்' என்று மாற்றி அமைத்துள்ளார்.**

அதேபோல் இளைஞர்களை உற்சாகமூட்டி ஊக்குவித்து வந்த டாக்டர் பாபா அவர்களின் அறிவாற்றலுக்கும், பொது நோக்கிற்கும், சிறந்த நினைவுச் சின்னம் டாடா டிரஸ்ட் போர்டு ஃபௌண்டேஷன் நிறுவனத்தாருடன் இணைந்து நிறுவியுள்ள 'ஹோமி பாபா ஃபெலோஷிப்ஸ் ஸ்கீம்' ஆகும். ஆக்க சக்தியில் ஈடுபட்டிருக்கும் 25லிருந்து 38 வயதிற்குள் உள்ள இளைஞர்களை (ஆண், பெண் இருபாலரையும்) ஊக்குவிப்பதற்காக இது நிறுவப்பட்டுள்ளது. ஃபெலோஷிப்ஸ் இரண்டாண்டுவரை நீடிக்கக் கூடியது. அதற்கு அளிக்கப்படும் சலுகைத் தொகை, இந்தியாவிற்குள் ரூபாய் 2000/-மும் (மாதத்திற்கு) வெளிநாட்டில மாணவர்கள் எடுத்துக் கொள்ளும் தொழில் துறை கல்விக்கேற்பவும் மாறுபடும். இந்த ஃபெலோஷிப்களுக்கான விண்ணப்பங்களை முழு விவரங்களுடன், பேராசிரியர் D.G. கார்வே, எக்ஸிகுடிவ் டைரக்டர், ஹோமி பாபா ஃபெலோஷிப்ஸ் கவுன்ஸில், நெ. 1, மங்கள்தாஸ் ரோடு, பூனா-1 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

ஹோமி பாபா நிலைய ஆராய்ச்சியாளர்களின் பட்டியலில், விஞ்ஞானிகள், பொறியியலாளர்கள், வேளாண்மை விற்பன்னர்கள், சிற்பக்கலை வல்லுநர்கள், கலைஞர்கள், கல்வித்துறை நிபுணர்கள், எழுத்தாளர்கள், ஆட்சித்துறை நிபுணர்கள் ஆகியோர் இடம் பெறுவர். அவர்களின் தலையாய பணி நம் நாட்டின் பல்வேறு துறைகளுக்குத் தேவைப்படுகிறது.

**டாடா ஸ்டீல்**

THE TATA IRON AND STEEL COMPANY LIMITED

TN 3885 A

டிருந்தான். அவன் உடம்பில் பல இடங்களில் அடித்தழும்புகள் தெரிந்தன. அவனுக்கு அருகில் முன்னடியான் போல் ஒரு புஸ்தி மீசைக்காரன் தன் கையில் ஒரு பாக நீளமுள்ள ஓர் புளிய மிலாறை வைத்துக் கொண்டு காட்டு ராஜாவின் உத்தரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

''அடி'' என்று ஓர் உத்தரவு காட்டு ராஜாவின் வாயிலிருந்து பிறந்தது.

''பளீர் பளீர்'' என்ற சத்தத்தோடு ஒவ்வொரு அடிக்கும் ஒரு துண்டு சதையைக் கொத்திக் கொண்டு வந்தது அந்தப் புளியம் மிலாறு. கட்டப்பட்டிருந்தவன், ''ஐயோ! அம்மா!'' என்று அலறினான்.

''அம்மா! அருமையான பெண்ணைத் தப்பி ஓட விட்டுவிட்டீங்களே. உங்களைக் கொன்றால்தான் என்ன?'' என்று கோபத்தில் உறுமினான் காட்டு ராஜா.

''குதிரைகளுக்கு லாடம் அடித்தவன் குருத்தில் படும்படி லாடத்தை அடித்து அத்தனை குதிரைகளையும் நொண்டி ஆக்கிவிட்டான். அடுத்த நாள் அவள் பட்டுநூல் தெருவில் பாடுகிறாள் என்று கேள்விப்பட்டவுடன் குதிரைகளை அவிழ்த்தோம். குதிரைகள் கால்களைத் தரையில் ஊன்ற முடியாமல் தத்தளித்தன. என்னைக் காவல் வைத்துவிட்டு நம் வீரர்கள் வைக்கோல் வண்டியை ஓட்டிக் கொண்டு போனார்கள். அவர்கள் அத்தனை பேரும் தஞ்சை வீரர்களால் பிடிக்கப்பட்டார்கள் என்று எனக்குத் தெரிந்தது. இதைச் சமூகத்தில் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் நான் ஏறக் குதிரையும் இல்லாமல் எங்கும் தங்கி இரையும் எடுக்காமல் ஓட்டமாக ஓடி வந்தேன். உங்க கிட்டச் சொல்ல வந்ததற்கு என்னைக் கொல்லணுமா?'' என்று அலறினான்.

''அவனை விட்டுவிட்டு நீ ஏன் வந்தாய்? வாங்கு இன்னும் இரண்டு'' என்று மிலாறை ஓங்கினான் மீசைக்காரன்.

''நிறுத்தடா!'' என்றான் கட்டுண்டவன். அவனால் நிமிர முடியவில்லை. ஆனால் அவன் உள்ளம் நிமிர்ந்து விட்டது.

''ஆம், ஐயா! நான்தான் அவளைத் தப்ப விட்டு விட்டேன். அதனால் நான் உயிருடன் இருக்கக் கூடாது. இதற்கு முன்னாலே கொண்டு வந்து கனிபோல கையில் ஒப்புவித்தோமே! அப்பொழுது தப்ப விட்டவன் உயிரோடு இருக்கலாமா?'' என்று காட்டு ராஜாவையே பார்த்து ஆத்திரத்தோடு கேட்டான் அவன்.

பிறகு கூட்டத்தினரைப் பார்த்து, ''அண்ணன்மார்களே! எனக்கு நேர்ந்திருப்பது உங்களுக்கும் நேர அதிக நாள் ஆகாது. இவன் யாரோ கள்வன். உங்களுக்கும் எனக்கும் ஆளுக்கு ஓர் ஊரையே தருவதாக ஆசை காட்டினான். ஆசைக்கு அடிமையாகி நாம் அநியாயத்துக்கு உதவினோம். அதன் பலன் ஒரு ஊரல்ல. மறு உலகத்தையே எனக்குக் கொடுக்கிறான். தீமைக்கு உடந்தையாக இருப்பவர்களுக்குப் பரிசு தீமைதான் கிடைக்கும். முல்லை வேந்தரே! காட்டு ராஜாவே! நீ எத்தனை அடி அடித்தாலும் அது என்னை இனி ஒன்றும் செய்யாது. நான் வேறு; உன் உப்பைத் தின்ற இந்த உடல் வேறு; அடிக்கலாம்.''

''ஊம்'' என்றான் அவன்.

முல்லை வேந்தனின் கை ஓங்கியது. ஆனால் அவன் அடித்த அடி மனிதனின் மேல் படவில்லை. அந்த வீரன் விடுதலை பெற்று விட்டான். இந்தக் காட்சி அவன் கூட்டத்தினரையே கலக்கியது. அத்தனை பேர்களின் கண்களிலும் நெருப்புப் பொறி பறந்தது.

மனிதன் என்றைக்கேனும் ஒரு நாள் திருந்தலாம். அதுதான் அவன் அறிவுடையவனாகப் பிறந்த பாக்கியம் என உணர்ந்தார்கள். ஆனால் அந்தோ! அறிவை மயக்கும் ஒன்றையும் மனிதன் கண்டு பிடித்துவிட்டானே!

ராணி ''அபுருபாபாயி''யினால் அனுப்பப்பட்ட நாலு மதுக் குடங்கள் அப்பொழுது அங்கு வந்து சேரவே, அந்த மனிதர்கள் மறுபடியும் மதியை இழந்தார்கள். இதைப் பார்த்துக் காட்டு மரங்கள் சிரித்தன. கைகொட்டிக் கூத்தாடின. அந்தக் குடிகாரக் கும்பலின் கூத்தும் கும்மாளமும் அதிகமாயின. அப்பொழுது அபுருபா பாயே அவர்கள் எதிரில் வேப்பிலையும் கையுமாகப் பிரசன்னமானாள்.

''தர்மத்துக்காக உழைக்கும் வீரர்களே, கைலாசபதியாகிய முல்லை வேந்தனின் தளபதிகளே! உங்களுக்கு நல் வாழ்த்துக்கள். நான் தஞ்சை அரசனின் பட்டமகிஷியாக இருந்த போதிலும் அரியணைக்கு ஆசைப்பட்டதில்லை. துறவு பூண்டு கனி கிழங்குகளையும் காய்ந்த சருகையும் உண்டு, காலம் கழித்து வருகிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். இவை யாவும் பூர்வாசிரமத்தில் இந்தக் கட்டை வயிற்றில் தோன்றிய உங்கள் அரசர் முல்லை வேந்தர் தலையில் முடிசூட்ட வேண்டும் என்பதற்காக அல்ல. தர்மத்தைக் காக்க வேண்டும். தர்மத்துக்கு மனிதர்கள் பாடுபட வேண்டும் என்பதற்குத்தான். தஞ்சையின் பட்டம் அவருக்கே உரியது. மூத்தவர் மகன் இருக்

கையில் சிற்றப்பன் பட்டம் கட்டிக் கொள்ளுவது நமது தர்மத்துக்கு எதிரிடை. மன்னவர் மரபுக்கு எதிரிடை. அவர் தலையில் மகுடம் சூட்டிய அன்றே நீங்கள் ஒவ்வொருவரும் மன்னார்குடி, பட்டுக்கோட்டை, கும்பகோணம் ஆகிய சுபாக்களின் ஒவ்வொரு கிராமத்துக்கும் அதிபதிகள் ஆவீர்கள். இன்று கானகத்தில் அவருக்குத் துணையாக இருக்கும் நீங்கள் நாளை பல்லக்கில் வருவதை நான் காண வேண்டும். முல்லை வேந்தருக்கு உரிய பட்டம் அவருக்குக் கிடைப்பதற்காக நாம் இரவு பகலாக இறைவனை நாடித் தவம் செய்து வருகிறோம். நேற்று நமக்கு ஓர் அசரீரி கேட்டது. 'முல்லைவேந்தரின் தலையில் மகுடம் ஏற வேண்டுமானால் தேவனாம்பட்டினத்திலும் சென்னைப் பட்டினத்திலும் உள்ள வெள்ளைக்காரர்களைப் பார். அவர்களைச் சினேகம் பண்ணிக்கொள். அவர்கள் பால் போல் நிறம் உடையவர்கள். பால் போல் குணமுடையவர்கள். பொன் முடி தரித்தவர்கள். பூனைக் கண் படைத்தவர்கள். எந்த ரகசியத்தையும் எளிதில் அறிந்து கொள்ளுவார்கள். பரமசிவன் இங்கே வந்தபோதே தேவர்களாகிய அவர்களும் பூமியில் வெள்ளைக்காரர்களாக அவதரித்து விட்டார்கள்' என்று ஆகாசவாணி உத்தரவிட்டது. நாம் அவர்களிடம் பேச நம்மில் தக்கவர்கள் யார் என்று வினவினோம். 'தஞ்சைச்சிறையில் இருக்கும் கௌமாஜி தான் அதற்குத் தக்கவர். அவரைக் கொண்டு வா' என்று உத்தரவிட்டு விட்டு விண்ணொலி மறைந்தது.

''கௌமாஜியைக் கொண்டு வருவீர்களா?'' என்றாள் அந்த மோகினி.

சிறிது நேரத்துக்குமுன் முல்லை வேந்தனைக் கொன்றுவிடுவது போல் பார்த்த அதே கூட்டத்தினர் இப்பொழுது பெட்டிப் பாம்பாக அடங்கி, ''ஆகட்டும். கொண்டு வருவோம். இது உறுதி''. என்றனர். விபூதியும் வேப்பிலையும் படுத்திய பாடு அது. அதோடு பத்து வேலி நிலத்தை விட்டுவிடப் பைத்தியம் பிடித்தவர்களா அவர்கள்?

**பை**த்தியத்தை எலுமிச்சம்பழம் நீக்கும் என்பதுதான் உலகம் அறிந்த விஷயம். ஆனால் அந்தப் பழமே பைத்தியத்தை உண்டாக்கியது என்றால் ஆச்சரியம் அல்லவா? கௌமாஜியின் சிறை வாசலிலே ஒரு நாள் காலை இரண்டு எலுமிச்சம் பழ மூடிகள் குங்குமத்தைப் பூசிக் கொண்டு கிடந்தன. மராட்டிய சிப்பாய் அதனை மிதிப்பானா அல்லது குதிப்பானா? தாண்டித் தாண்டி நடந்தான். காவலையும் விட முடியவில்லை. காலாலும் மிதிக்க மனமில்லை. பாரா மாற்றும் பொழுது பசியைப் பற்றிக் கூடக் கவலைப்படாமல் மற்ற பாராக்காரர்களிடமெல்லாம் இதைப் பற்றவைத்தான். ''நடு ராத்திரியில் காட்டேரி கத்தியது. காலையில் பார்த்தால் எலுமிச்சம் பழத்தை அறுத்துப் போட்டிருக்கிறது. இது யார் கழுத்தை அறுக்கப் போகிறதோ?'' என்று கதை கட்டினான் மராட்டிய சிப்பாய். பாராக்காரன் சொன்னால் என்ன? பாவாஜிக்கு இது போதாதா?

''மேரி பியாரி, சுஜானு பாய். அரண்மனைக்குள்ளே யாரோ உனக்கு ஏவல் வைக்கிறாங்க'' என்று தன் மனைவியிடம் கதறினார் பாவாஜி.

''இது ஏவல் இல்லை. காவல்காரன் கைவேலை'' என்று அவர் கன்னத்தில் இடித்தாள் சுஜானு பாய். ஆயினும் அவள் கணவனுக்குத்தான் பயப்படமாட்டாளே தவிரக் காட்டேரிக்குப் பயப்படுவாள். திருக்காட்டுப்பள்ளியில் காவிரித் திருநாள் நடந்தது முதல், அவள் பல கெட்ட கனவுகளைக் கண்டு வந்தாள். கனவுகள் எல்லாம் காளிமாதாவின் கடிதங்கள்; தும்மல்கள் யாவும் துர்க்கையின் எச்சரிக்கைகள் என்று நம்பக் கூடியவள் அவள். கணவன் தலையில் இருக்கின்ற கிரீடத்தைப் பிரதாப சிம்மர் பறிப்பது போலவும், பாவா சாகிபையும் அவருடைய நவ பத்தினிமார்களையும் தெப்பத்தோடு சேர்த்துக் காவிரியில் அமுக்குவது போலவும் கனவு கண்டாள். இந்த எலுமிச்சம் பழ நிகழ்ச்சி அதை அவளுக்கு நினைவு படுத்தியது. ''ஆமாஜி'' என்று இரைந்து கத்தினாள் சுஜானு பாய்.

''ஹாங்...ஜி!'' என்று தலையை ஆட்டிக்கொண்டு ஆமாஜி அங்கு வந்து நின்றார்.

அந்தப்புரத்தில் அந்தேரி மால் என்னும் இருட்டறைக்குப் பக்கத்தில் உள்ள சிறைச்சாலையில்தான் கௌமாஜி சிறை வைக்கப்பட்டிருந்தார்.

ஆமாஜியையும் அழைத்துக் கொண்டு அன்றிரவு சுஜானுபாய் காவல்காரர்களுக்குக் கைநிறையப் பணம் கொடுத்து விட்டுத் தானே கௌமாஜியைப் பார்க்க வந்தாள். அவளைக் கண்டவுடன், ''ஜெய்... கல்யாணி'' என்று அவளை மண்டியிட்டு வணங்கினார் கௌமாஜி. அவள் திகைத்தாள். நடுங்கினாள். ''தாங்கள் இவ்வாறு செய்யக் கூடாது; தாங்கள் முக்காலமும் உணர்ந்தவர்கள்'' என்று பரபரப்போடு மொழிந்தாள். கௌமாஜி சரேல் என்று

# சிங்கார் குங்குமம்



உங்கள் மேனி வண்ணத்திற்கும், சேலைக் கலர்களுக்கும் இணையான பல நிறச்சாயல்களில் கிடைக்கும் சிங்கார் குங்குமம், உங்கள் எழிலுக்கு எழில் கூட்டி முகத்திற்கும் பொலிவைத் தருகிறது.

அது எடுப்பான ப்ளாஸ்டிக் குப்பிகளில் அல்லது ட்யூபுகளில் கிடைக்கிறது.




Bottle design Registered
Patent No: 128338

***PIPIS PRODUCTS***

பேரமவுண்ட் பிராடக்ஸ், பம்பாய்-2.

எழுந்தார். அவள் முகத்தையே ஆவேசத்துடன் நோக்கினார்.

"நான் உன்னை நமஸ்காரம் செய்வேனா? அறுபது வயதுக் கிழவன் ஒரு பெண்ணுக்கு வணங்குவானா? நான் என்ன செய்வேன் சுஜனா பாய்? நீ உள்ளே நுழையும்போது உன் முகத்தில் மங்களா தேவியைப் பார்த்தேன். உன் தலையில் மணி மகுடம் பிரகாசித்தது. நீ தேவியாகவே காட்சி யளித்தாய்" என்று உரக்கக் கூவினார் அவர்.

"மெதுவாகப் பேசுங்கள். யார் காதிலாவது கேட்டு வைக்கப் போகிறது" என்று சொல்லி விட்டுத் தன்னை ஒரு முறை கர்வத்துடன் பார்த்துக் கொண்டாள் சுஜனாபாய். அவளிடம் முதலில் விஷயத்தைச் சொல்ல வில்லை கௌமாஜி. கடைசியில் அவள் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதன் பேரில் "இந்த அரண்மனைக்குள் வஞ்சகமும் சூதும் அதிகமாகி விட்டன. இது தெய்வத்திற்கே பொறுக்க வில்லை. அரண்மனையை அடியோடு அழிக்க சாட்சாத் பரமசிவனே அவதாரம் செய்திருக்கிறார். நேற்று அவர் கையில் உருவிய கத்தியுடன் என் கண் முன் பிரசன்னமானார். நான் 'பாவாஜி பரம பக்தர். அவர் மனைவி சுஜனாபாய் பதிவிரதா சிரோமணி. பாவாஜியின் தலையில் கிரீடம் ஏறினாலும் உண்மையில் அவர் பத்தினிதான் இந்த ராஜ்யத்தை ஆளப் போகிறாள். ஆதலால் பாவாஜிக்குப் பட்டம் கட்டும் வரை நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்' என்று சிவபெருமானிடம் மன்றாடினேன். எலுமிச்சம் பழத்தில் என் இரத்தத்தைத் தோய்த்து அவர் கத்திக்குக் காவு கொடுத்தேன். "எனக்காக ஒரு ஹோமம் நடத்து. அந்தப் பதிவிரதைக்காக நாம் கொஞ்சம் நாள் பொறுக்கிறோம்!" என்று உத்தரவு செய்துவிட்டு அவர் மறைந்தார். உன் தலையில் மணிமுடி ஏற வேண்டுமானால் 'ஒரு மலை முழுங்கி மகாதேவ ஹோமம் முடிக்கும் வரையில் இந்தச் சிறைச்சாலையின் கதவுகள் யாரையும் தடுக்கக் கூடாது. மஹாபிரசாதத்தை ஏற்றுக் கொள்ள பகவான் எந்த ரூபத்திலும் வருவார். ஜாக்கிரதை!" என்றார் கௌமாஜி.

ஹோமத் திரவியங்கள் இரகசியமாகச் சிறைச்சாலைக்குள் புகுந்தன. ஒரு கட்டு சமித்தும் அண்டா நிறையப் பசுவின் நெய்யும் நூறு வராகன் பண முடிப்பும் ஆமாஜி மூலம் அனுப்பி வைத்தாள் சுஜனாபாய். பணத்தை விரலாலும் தொட மறுத்து விட்டார் கௌமாஜி.

தம் மருமகன் மூலம் அந்தப் பையை யுவராணியிடம் திருப்பிக் கொடுத்த பிறகே நள்ளிரவில் ஹோமத்தை ஆரம்பித்தார். **(தொடரும்)**

# ஏமாற்றம்!

அவிநாசி முருகேசன்





சிவதாணு ஐயருக்கு அன்று என்றுமில்லாத கொண்டாட்டமா யிருந்தது!

வெற்றிலைச் சீவலை வாய் நிறையப் போட்டுக் குதப்பிக் கொண்டு அங்கவஸ்திரத்தை எடுத்துக் கழுத்தைச் சுற்ற வைத்துக் கொண்டே, லேசான மந்தகாஸப் புன்னகையுடன் வீட்டு வாசற்படியைத் தாண்டி உள்ளே வந்தார்.

''ஏண்டி... செல்லம்... கேட்டயா சேதி? நினைக்க நினைக்க எனக்கு ஒரே சிரிப்பா வரதடி...'' விஷயத்தைச் சொல்லாமலே இடையில் சிரிக்கிறார். தாம்பூலம் வெளியில் வழியாமல் இருக்க அங்க வஸ்திரத்தை எடுத்துத் தயாராக வாயருகிலேயே வைத்துக் கொள்ளுகிறார்!

''எனக்கு ஒண்ணுமே புரியல்லே... நன்னு விபரமாத்தான் சொல்லித் தொலையுங்களேன்: ராஜா மாதிரி வரும்போதே சிரித்துக்கொண்டு ஏதோ பிடிகையுடன் வரதைப் பார்த்தா எனக்கு ஒரு விதத்திலே பயமாகக்கூட இருக்கு...''

''ஏன்மா! உனக்குக் கூடப் பயம் வருமா?.. நான்தானே உன்னைக் கண்டு பயந்துண்டிருக்கேன்!...''

''போதும், நிறுத்துங்கோ!... கிண்டல்-வேறே வேண்டிக் கிடக்கா உங்களுக்கு...'' முந்தானையை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள் செல்லம்மாள்!

''அடி அசடே! இன்னிக்கு எனக்கு நூறு ரூபா கெடச்சது....அந்த விஷயத்தைச் சொல்லத்தான் நான் வந்தேன்...'' ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார் சிவதாணு அய்யர்!

செல்லம்மாளுக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. ''என்ன சொன்னேள்?... நூறு ரூபாயா? உங்களுக்கா? நீங்க கன நினைவோடு தான் பேசிண்டிருக்கேளா?... நேக்கு ஒண்ணுமே புரியல்லேயே ஈசுவரா...!''

''ஏண்டி செல்லம்... நீ கனவும் காணல்லே; எனக்குச் சுயநினைவும் கெட்டுப் போகல்லே.''

''அப்படீன்னு... அந்த நூறு ரூபாயை என்ன செய்யப் போறேள்... எனக்குப் 'பாலும் பழமும்' புடவை மட்டும் ஒண்ணு எடுத்துக் கொடுத்துடுங்கோ. மீதிக்கு நீங்க ஏதாவது வேஷ்டி எடுத்துக்குங்கோ.''

அவர் இடி இடியெனச் சிரித்தார்

''அடி போடி பைத்தியக்காரி ... நூறு ரூபாய் இப்போது கையிலே இல்லே. ஆனா...''

''என்ன ஆனா, ஆவன்னா...! சீக்கிரம் கொடுங்கோ. நாளைக்கே போய்ப் புடவையை எடுத்துண்டு வந்துடறேன்...''

மீண்டும் அவர் சிரித்தார். செல்லம்மாளுக்கு ரோஷம் தாங்கவில்லை:

''என்ன நீங்க?...? நான் பாட்டுக்குப் பேசிண்டே இருக்கேன்..... நீங்கபாட்டுக்கு சிரிச்சுண்டே இருக்கேள்...... பரிகாசமா செய்யறேள்...?''

''செல்லம் ..... இப்படி அவசரப்பட்டால் எப்படி?''

''நன்னாப் புரியும்படிதான் சொல்லித் தொலையுங்களேன்...''

''நம்ம பக்கத்து வீட்டு 'மறதிப் பேர்வழி' முனுசாமியை உனக்குத் தெரியுமோ...?''

''ஆமாம்... நீங்ககூட அவரிடம் போன மாதம் ஒரு விசேஷத்துக்கு நூறு ரூபாய் கடன் வாங்கினேளே... அந்த முனுசாமியையா சொல்றேள்...?''

''ஆமாம்! அந்த மறதிக்காரப் பேர்வழி முனுசாமியைத்தான் சொல்றேன்...... போன மாசம் அவரிடம் கடன் வாங்கினது உனக்குக்கூட ஞாபகம் இருக்கே...''

''எனக்கு நன்னா ஞாபகம் இருக்கு: ஆனா எனக்கு இருந்து என்ன செய்யறது? உங்களுக்கல்லவா ஞாபகம் இருக்கணும்...''

''எனக்கும் இருக்கு...உனக்கும் ஞாபகம் இருக்கு... ஆனா அந்த முனுசாமிக்குத்தான் ஞாபகமில்லே! நேற்று அவாத்துக்குப் போறச்சே.... நான் திருப்பிக் கொடுக்க வேண்டிய பணத்தை அவர் கேட்கவே யில்லே

அப்புறம்....?''

''அப்புறம்... இன்னும் ஆச்சரியம் என்னன்னு நான் அவர்கிட்டே பணம் வாங்கவே இல்லேன்னு முனுசாமியே சொல்லிட்டார்!''

''நெஜத்தைத்தான் சொல்றேளா?''

''நான் ஏண்டி பொய் சொல்றேன்? அவர் பேர்தான் உனக்குத் தெரியுமே... 'மறதிக்கார முனுசாமி'ன்னு ஊரே தெரிஞ்ச விஷயம்தானே?....''

''எப்படியோ முனுசாமியை ஏமாற்றி விட்டோம்!''

சிவதாணு ஐயர் நேற்று அடைந்த சந்தோஷத்தை விட, இன்று இரண்டு மடங்கு இல்லே, மூன்று மடங்கு, அதுவும் இல்லே.... பத்தாயிரம் மடங்கு சந்தோஷமடைந்தார்!

கிண்டி குதிரை ரேஸில் அவருக்குப் பத்தாயிரம் ரூபாய் பரிசு விழுந்திருந்தது!

அவர் மூர்ச்சை போட்டு விழாமல் மிக ஜாக்கிரதையாக ஒரு 'நல்ல' டாக்ஸியில் ஏறி அமர்ந்துகொண்டார். ''ட்ரைவர், நேரா மேற்கு மாம்பலத்துக்கு விடப்பா....!''

டாக்ஸி மேல மாம்பலத்தை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது!

'ஆமாம்!... எனக்குத்தான் பத்தாயிரம் ரூபாய் கெடச்சிருக்கே... முனுசாமிக்கு அந்த நூறு ரூபாயைத் திருப்பிக் கொடுத்து விட்டால் என்ன?....சேச்சே....! என்ன... முனுசாமிக்கா? நூறு ரூபாயை எதற்காகத் திருப்பித் தருவது? அவரிடம் நான் என்ன வாங்கிண்டு தர மாட்டேன்னு சொன்னேனு?... ஒரு சல்லிக் காசு கூடத் தர மாட்டேன்... ஹா...ஹா... ஏமாற்றி விட்டேன்... ம்... ஏமாற்றி விட்டேன்...' டாக்ஸி ஓடிக் கொண்டிருந்தது.

டாக்ஸி டிரைவரின் சிவந்த கண்கள், சிவதாணு ஐயரின் கரங்களில் துள்ளிக் கொண்டிருந்த ரூபாய் நோட்டுக்களையே உற்று நோக்கிக் கொண்டிருந்தன.

ரத்தக் காயங்களுடன் திருவல்லிக்கேணி கடற் கரையை நோக்கித் தள்ளாடியப்படி நடந்து கொண்டிருந்தார் சிவதாணு ஐயர். விரக்தியுடன் சமுத்திரத்தையே சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

எதிரே பாரதி சிலை! யாரையோ பார்த்துக் கைகளை நீட்டியவாறு இருந்தது!

'ம்.... ஆண்டவனே... எப்படியோ எனக்குக் கிடைத்த பத்தாயிரம் ரூபாய்களையும் பிடுங்கிண்டே. அந்த டாக்ஸிக்காரன் நிஜமான டிரைவர் இல்லேன்னு தெரியாமல் போச்சே!... ஹே, கிருஷ்ணு! இப்படிக் கைக்கெட்டியதை வாய்க்கெட்டாமல் செய்து விட்டாயே! இது நியாயமா? இது தர்மமா? முழுசா . பத்தாயிரம் ரூபாய்! எனக்கு ஆண்டவனே பார்த்துக் கொடுத்தான்! அப்புறம் அவனே பிடுங்கிக் கொண்டான். எனக்குக் கொடுத்த தண்டனையா இது? ஹூம்! நான் வாழ்வதை விடச் சாவது எவ்வளவோ தேவலை. இந்த பீச்சிலேயே என் பிணம் மிதக்கத்தான் போகிறது. இதோ—'

சிவதாணு ஐயர் சமுத்திரத்தின் எல்லைக்கே ஓடுகின்றார்! பீறிட்டெழுந்த அலை அவரை அணைத்துத் தழுவ வெகுண்டு வருகிறது. ஒரு கணம்! ஒரே ஒரு கணம்! அவர் ஊனக் கண்களுக்கு அந்தப் பேரலை 'மறதிக்கார முனுசாமி'யாகக் காட்சி யளிக்கிறது!

அலையோசை அவர் காதைச் செவிடாக்குகிறது. மறுகணம் 'படார்' என்று பேரலைகள் அவரைப் பலமாகத் தாக்குகின்றன.

என்ன ஆச்சரியம்! மீண்டும் அவர் கரையோரத்தே ஒதுக்கப்பட்டிருப்பதை உணர்கிறார்.

'நான் இன்னும் சாகவில்லையா?' அவரையே கேட்டுக் கொள்கிறார்!

'வாழ்க்கை என்ற . கடலையே இன்னும் தாண்டி முடிக்காத நீ இந்த அலை கடலை அவ்வளவு சுலபத்தில் கடக்க முடியுமா?' பாரதி சிலைதான் பேசுகிறதோ?

'ம்... நான் ஏன் சாக வேண்டும்? நான் அப்படி என்ன தவறு செய்து விட்டேன்? நான் ரேஸுக்குக் கையில் கொண்டுபோனதே ஐந்து ரூபாய்தானே?... எப்படியோ வந்தது எப்படியோ போயிடுத்து... லாபமும் இல்லே, நஷ்டமும் இல்லே... வீட்டுக்குப் போக வேண்டியதுதான்!'

வீட்டை நோக்கி அவர் கால்கள் பீடுநடை போட்டன!

வீட்டை நெருங்குவதற்கு முன்பே, அவர் மனைவி ஆரத்தித் தட்டுடன் வெளியே ஓடி வந்தாள்!

''வாங்கோ... வாங்கோ! எனக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பப்படாதோ? நான் உங்களுக்கு வேண்டாதவளாகி விட்டேனு? ஒரு ரூபாயா.. இரண்டு ரூபாயா? பத்தாயிரம் ரூபாய்! அப்பாடி, பத்தாயிரம்! சீக்கிரம் எடுங்கோ! என் கண்ணுலே ஒரு தடவை பார்த்துவிட்டு உங்க கிட்டேயே கொடுத்துடறேன்...''

சிவதாணு அய்யர் ஏதும் புரியாமல் விழித்தார். ''என்ன உளறுகிறாய்?''

''நானு உளறுகிறேன்? நீங்கதான். நமக்கு ரேஸிலே பத்தாயிரம் வந்திருக்குன்னு நம்ம வேணு இப்பத்தான் சொன்னுன். பகவான் நமக்கு நல்ல காலத்தைக்கொடுத்திருக்கார்.''

''அடி போடி! எரியற நெருப்பிலே எண்ணெய் ஊத்தறயே!... பணம் வந்ததென்னவோ உண்மைதான்.ஆனு, அதை எப்படிச் சொல்வேன்? வழியில் எவனே திருடி அடிச்சுப் பிடுங்கிண்டு போயிட்டான். நம்ம கெட்ட காலம்...''

''ஐயோ! திருடிண்டுட்டானு?'' — அப்படியே செல்லம்மாள் மூர்ச்சையாகி விழுந்தாள். பல வருஷங்களாக இல்லாமலிருந்த அந்தக் கொடிய வியாதி — 'ரத்த அழுத்த' நோய் இப்போது செல்லம்மாளை மீண்டும் பற்றிக் கொண்டது!

'கை நஷ்டம் ஒன்றுமில்லையே' என்று அற்ப சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த சிவதாணு அய்யருக்கு, டாக்டர் ரூபாய் ஐந்நூறு வரையில் செலவு வைக்கக் காத்துக் கொண்டிருந்தார்!

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. [illegible]

Registered as a Newspaper in Ceylon